சிரவைக் கௌமார சபை வெளியீடு: எண். 107.

உ

குருவே துணை.

# தியாகானுபூதி

மூலமும் - உரையும்

※

ஆசிரியர்

திருவாமாத்தூர் - கௌமார மடாலயம்

தவத்திரு. தண்டபாணி சுவாமிகள்

※

சிரவணபுரம் - கௌமார மடாலயம்

தவத்திரு. கந்தசாமி சுவாமிகள்

17-வது குருபூசை

நினைவு வெளியீடு.

1965. Rs. 1-00

சிரவைக் கௌமார சபை வெளியீடு எண்: 107



உ

குருவே துணை.

# தியானானுபூதி

அன்பளிப்பு:

* தஞ்சாவூர்

நடராஜ பிள்ளை உலகநாதன் M.A.B.T


அருளியவர்:

திருப்புகழ் சுவாமி, முருகதாசர்

என வழங்கும்

அருள்மிகு. தண்டபாணி சுவாமிகள்





சிரவணபுரம். கௌமார மடாலயம்

தவத்திரு. கந்தசாமி சுவாமிகள்

17-வது குருபூசை நினைவு மலர்.

1965.

உ

குருவே துணை.

# தியானுனுபூதி

( மூலமும் - உரையும் )

○

ஆசிரியர் :
மகான் வண்ணச்சரபம்
திருப்புகழ். முருகதாச சுவாமிகள்
என வழங்கும்
அருண்மிகு. தண்டபாணி சுவாமிகள்

○

உரையாசிரியர் :
தவத்திரு. செந்திநாயக சுவாமிகள்

○

பதிப்பாளர் :
கச்சிராபாளையம் - நகை வியாபாரம்,
கௌமாரத்திரு. R. பட்டிலிங்க முதலியார்.

Paari Achakam, 127, Broadway, Madras - 1.

70-2

உ

குருவே துணை.

# பதிப்புரை

திருவாமாத்தூர் கௌமார மடாலயத்தில் ஞான சமாதிகொண்டு விளங்கும் *திருப்புகழ் சுவாமிகள், முருகதாச சுவாமிகள் என வழங்கும் அருள்மிகு தண்டபாணி சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய 'தியானுனுபூதி' என்னும் இந்த நூல் சிரவணபுரம் கௌமார சபையின் 107-வது வெளியீடாக வெளி வருகிறது. நமது கௌமார மடாலயத்தின் அன்பரும், தவத்திரு கந்தசாமி சுவாமிகளின் மாணவருமான திருவாளர் R. பட்டிலிங்க முதலியார் அவர்கள் தமது 60-வது ஆண்டு நிறைவை யொட்டி, குருநாதரான தவத்திரு கந்தசாமி சுவாமிகள் 17-வது குருபூசை நாளில் இந்நூல் வெளி வருவதற்கு உரிய பொருளுதவியினைச் செய்துள்ளார். சென்னை பாரி அச்சகத்தார் உரிய நாளில் நல்ல முறையில் அச்சிட்டுத் தந்தனர். அனைவருக்கும் சிரவைக் கௌமார சபையின் சார்பில் நன்றியையும் வாழ்த்தையும் தெரிவித்துக் கொள்ளுகிறேம்.

கௌமார மடாலயம்,
சிரவணபுரம்,
4—12—1965.

இன்னணம்:
சுந்தர சுவாமிகள்,
தலைவர்.

குருவேதுணை

# பதிப்புப்பாயிரம்

## வெண்பா

நெல்லைப் பதியில் நிலவுதண்ட பாணிமுனி
முல்லை மலர்த்தோட் குகனருளால்—எல்லையின்றிச்
செந்தமிழ்நூல் செய்தான், திகழும்வகை பற்பலவாம்
அந்தவிதம் முற்றறிவார் ஆர்? 1

தோத்திர,மி லக்கணம்,சீர் தோயும்வர லாறுடனே
சாத்திரமென் றேதத் தகுமவற்றுள்—நேத்திரத்தைப்
போன்ற தியாநுபூதியெனும் சீரியநூல்
ஆன்றதவர் போற்றுதகைத் தாம். 2

சிரவையிரா மானந்தத் தேவனுளம் ஈர்க்கும்
தரமுடைத்தென் றுலிதொன்றே சாலும்—விரவதற்குத்
தக்கவுரை செய்து தவச்செந்தி னுயகனுர்
மிக்கசிறப் பேற்றியது மேல். 3

பாட்டுமட்டு முன்பு பதிப்பா கியும் தீர்ந்த,
கேட்டுவந்தார் கொண்டு கிளர்ச்சியுறக்—கூட்டுமுறை
சேர்த்துப் பதித்துச் சிறக்க வெளியிட்டான்
சீர்த்தபொருள் கொண்டு தெரிந்து. 4

நாடுபுகழ்க் கீரணத்து ராமசா மிப்பெயர்கொள்
பீடுடையோன் சேயாய்ப் பிறங்குவோன்—கூடும்
சிரவைக்கௌ மாரசபைச் சீலனின்னூல் கற்றேன்,
பரவுபட்டி லிங்கமெய்யன் பன். 5

தன்னறுபா னுண்டுநிறை தக்க சமயத்தில்
மன்னுகந்த சாமிமுனி வண்பூசை—துன்னுமன்று
பன்னுநினை வாகப் பரிந்து வெளியிட்டான்
மின்னுமின்பாய் வாழ்க மிக. 6

பொன்மருவும் வாணிபமும், போற்றும்வியவ சாயமுமாம்
தன்ம வருவாய் தனைக்கொண்டு—நன்மகிமைப்
பூசைவழி பாடு புரிபட்டி லிங்கநண்பன்
நேசமுடன் வாழ்க நிலத்து. 7

விசுவாவசுஹூ
கார்த்திகைமீ
19உ

திரு. செ, முருகதாச ஐயா,
கௌமார மடாலயம், திருவாமாத்தூர்.

70-2

உ

குருவே துணை.

# முகவுரை



தியானுனுபூதி என்னும் இந்நூல் ஐவகையாம் பொறியும் அடங்கிட, ஒன்றியிருத்தலுக்கு உறுதுணை புரியும் மெய்ப் பொருள் விளக்கம் எனலாம். தியானம் என்பது தெய்வத் திருவுருவை நினைந்து பொறி யடங்கிப் புலனடங்க ஒன்றியிருத்தல். அநுபூதி என் பது அது கைவரப் பெறும் நிலை. இதனை அப்பரடிகள் 'ஒன்றியிருந்து நினைமின்கள் உந்தமக்கு ஊனமில்லை ...........'' என்று அருளியுள்ளார். இந்நூல்; தென் பாண்டி நாட்டுத் திருநெல்வேலியில் தோன்றி முருகப் பெருமான் திருவருளால் தெய்வப்புலமை வாய்ந்து, இலக்கண இலக்கிய மெய்ப் பொருள் நூல்களை அருளிய திருப்புகழ் சுவாமிகள், முருகதாச சுவாமிகள் என வழங்கும் அருண்மிகு, தண்டபாணி சுவாமிகள் அருளிய தாகும். இவர்கள் பாடிய பாடல்கள் ஐம்பதினுயிரத் திற்கு மேற்பட்டவையாகும்.

சமயநெறி தொட்டு நின்று சாதித்து உண்மைத் தவம் புரியும் மேலோர்களுக்கு இந்நூல் ஓர் வழிகாட்டி யாகும். இதில் தெய்வவுருத் தியானநெறியினை மேற் கொள்ளும் பாங்கும் அதனுற் பெரும் பயனும் இவை யென்பதைத் தாம் பெற்ற மெய்யுணர்வுடன் விளக்கி யுள்ளார்கள். உருவ் வழிபாட்டில் தம்மை ஈடுபடுத்தும்

அன்பர்கட்கு இது கிடைத்தற்கரிய கருவூலம் எனலாம். அருண்மிகு, தண்டபாணி சுவாமிகள் தமக்கு முருகன் திருவருள் கைவரப் பெற்றமையையும், அதன் நெறி முறைகளையும் முப்பத்து மூன்று பாடல்களில் மிகத் தெளிவாகக் கூறியுள்ளார். இதன் விரிவுகளாக நூறு பாடல்களால் நானிலைச் சதகமும், முந்நூறு பாடல்களால் கௌமார முறையும் அருளியுள்ளார்கள். இவை முத்திப் பெருவாழ்வை விரும்புவோர் திகழ்பரமாம் பொதுவடிவைக் கருதொண்ணாது திருவுருவாத் தியானித்துத் தேற வேண்டும். "திக்கெங்கும் இருந்த தலத்துணர வல்ல சிவயோகத் தோர்களுக்கும் தியானம் உண்டே" என்பனவற்றை வலியுறுத்தும் அரிய கருத்துக்களைக் கொண்ட எளிய இனிய பாடல்களால் கூறப்பட்டுள்ளன.

கொங்கு நாட்டின் மாதவக் குன்றமாக-எம்போன்றாரைத் தீநெறிச் செல்லாது விலக்கி நன்னெறிச் செலுத்தி இருவினை கடியும் நவையறு காட்சியால் ஆட்கொண்டருளி ஞான விளக்காக விளங்கிய சிரவணபுரம் கௌமார மடாலயத்தின் ஆதி குரு முதல்வர் அருண்மிகு இராமானந்த சுவாமிகளின் திருவுள்ளம் நெகிழப் பிணித்த நூல் இத் தியானுனுபூதி என்பதை அவர்கள் திருவாக்கால் அறிந்துள்ளேன். தம் குருநாதராக அருண்மிகு தண்டபாணி சுவாமிகளை ஏற்றுக் கொள்ளத் தூண்டித் துணை நின்றதே, இம் மெய்ப் பொருள் விளக்கமாம் தியானுனுபூதி என்றால் இதன் பெருமை எம் போன்ற சிற்றறிவினரால் எடுத்துரைக்கும் பெற்றியதோ! சமயப் பிணக்குகளால் தடுமாறும் நிலை நாட்டில் பல்லாண்டுகளாக இருந்து வருகிறது. சமயவாதிகள் தத்தம் மதங்களே அமைவதாக அரற்றி மலைந்தனர் என்கிறார் மணிவாசகர். நமது அருட் சான்றோர்கள் எல்லாம் உடையான் குருவாகி வந்து ஆட்கொண்டு சமயப் பிணக்கு நீக்கும் பாங்கை விளக்கி

யுள்ளார்கள். எமது ஆதி குரு முதல்வர் அருள்மிகு சாந்தலிங்க அடிகளார் அவிரோத உந்தியார் என்ற நூலில் இவ்வுண்மையைத் தெளிவு படுத்தியுள்ளார்கள். தாயுமானூர், வடலூர் இராமலிங்க வள்ளலார் ஆகியோரும் அந்நெறி நின்று சமய ஒருமைப்பாடு கண்டுள்ளார்கள். அருண்மிகு தண்டபாணி சுவாமிகள் அத்தகைய நெறி உலகெங்கும் பரவ அரிய அருள் நூல்களை அருளித் திருவருள் நலந்தோய்ந்த வீரச் செம்மலாவார். அறிவறிய தெய்வத் திருவுருவை ஆணுக அல்லது பெண்ணுகக் கருதி வழிபடுதல் எம் மதத்தினர்க்கும் ஏற்புடையது ஆதலின், மனம் கசிந்து தெய்வத் திருவுருவை வழிபட்டுக் கண்ணீர் மல்கப் பாடிப் பரவுவதே சிறந்த நெறி என்பதை இந்நூலில் "அறிவரிய தெய்வத்துக் குருவம் சொல்லில்" என்னும் பாடலில் கூறிப் "பொறிமயிலாம் குடிலைமிசை ஞானசத்தி புனைந்த செங்கைக் குமரவேளைத் தாம் நறுமண மலரால் வழிபட்டுத் தேனேர் செந்தமிழ்ப் பாடல்களால் மிகத் துதித்துப் பேறு பெற்றமையை விளக்கியுள்ளார்.

இத்தகைய நூலுக்குக் கௌமாரத் திருநெறியின் முழுமையை நன்குணர்ந்து அரும்பெரும் கருத்துக்களை நூல் வடிவாக வழங்கிய தவத்திரு, சந்தப் புலமைச் செந்திஞயக சுவாமிகள் விரிவுரை எழுதியுள்ளார்கள். செந்திஞயக சுவாமிகள் அருண்மிகு தண்டபாணி சுவாமிகளது மகனும் மாணவரும் ஆவார். இவர் அருள்மிகு இராமானந்த சுவாமிகளது வழி நின்று இந்நெறி விளங்கத்தம்மை முழுதும் ஈடுபடுத்தி வாழ்ந்த பெருந்தகை. இந்நூல் எல்லோர்க்கும் எளிதில் விளங்கும் தன்மையில் அமைந்தது எனினும் இதன் உட்பொருளை உள்ளவாறு உணர விரிவுரை வகுத்து நவில்தொறும் வெளிப்படும் நூல் நயத்தினைத் தெளிவுறுத்தியுள்ளார்கள்.

இதனை அச்சிட்டு வழங்கிய கௌமாரச் செல்வர் திரு. இரா. பட்டிலிங்க முதலியார் அவர்கள் சிரவை, கௌமார மடாலயத்தின் வழிவழித் தொண்டராவார். இவர் தந்தை திரு. இராமையா முதலியார் கோவைக் கடுத்த கீரநத்தப்பதியில் வாழ்ந்து அருண்மிகு, இராமானந்த சுவாமிகளின் மாணவராகிக் கௌமாரத் தொண்டராய் விளங்கியவர். தந்தைவழி யொழுகும் சேலம், கச்சிராப் பாளையம் திரு. பட்டிலிங்க முதலியார் அவர்கள் சிரவைக் கௌமார மடாலயத்தின் தலைவராக விளங்கிய எமது அருளாசிரியரும் தெய்வப் புலமைச் செம்பொருட் செல்வரும் ஆகிய, தவத்திரு. கந்தசாமி சுவாமிகளின் மாணவராவார். இவர் இந்நூலின் அருமையைத் திருமடத்தின் அருளாட்சித் தலைவர்களால் உணர்ந்து தமது அறுபதாம் ஆண்டு மணிவிழா வெளியீடாக வெளியிட்டுள்ளார். மணி விழாக் கொள்ளும் திரு. இரா. பட்டிலிங்க முதலியாரும் அவர் மனைவியும் விழா மலராக அருள் மணம் தோய்ந்த இந்நூலை வெளியிடுவது சிறந்த நற்பேருகும். இந்நூல் வெளிவர உறுதுணையாக இருந்த சான்றோர்களுக்கும் இதனை வெளியிடப் பொருளுதவிய திரு. பட்டிலிங்க முதலியார் குடும்பத்தினர்க்கும், அழகுற விரைவில் பதித்துதவிய 'பாரி' அச்சகத்தினர்க்கும் நலம் பலவும் சிறக்குமாறு எல்லாம் வல்ல சற்குரு நாதரது திருவடிகளை வாழ்த்தி வணங்குகின்றேன்.

*தவத்திரு.*
*சாந்தலிங்க அடிகளார்*
*திருமடம், பேரூர்.*
19—11—1965.

அன்பன்,

**இராமசாமியடிகள்.**



மகான் வண்ணச்சரபம் அருள்மிகு தண்டபாணி சுவாமிகள்.

1839 ● 1898

உ

குருவே துணை

# தியானநுபூதி நூல்

## மூலமும் உரையும்

### பாயிரம்

### வெண்பா

*வயாநீங்கற் காமுயலும் மாதவச்சீர் ஆய*
*தியானநு பூதிநன் னூல் செப்பத்—தயாகாட்டம்*
*கொண்டகுரு ஆதியபல் கோடிதெய்வம் ஆகிஒன்றா*
*தொண்டருள்வாழ் உண்மை துணை. [ய்த்*

பொழிப்புரை: பிறப்புஇறப்பு என்னும் துன்பங்கள் இல்லாது ஒழிதற்பொருட்டு இயற்றுகின்ற மகிமைத்தவத்தின் சிறப்புவிதியான தியானநுபூதி என்னும் நல்லசாத்திரநூலை யான்சொல்வதற்கு, கருணை நிறைந்த பார்வையையுடைய குருவடிவ முதலான பலவிதத் தெய்வ வடிவங்களாய் விளங்கி, உண்மையடியவர்கள் மனவெளியில் அருள்மயமாய் அமைந்துவிளங்குவதான சத்தியப்பொருள் உதவியாயிருக்கும் எ-று.

விளக்கவுரை: தவஞ்செய்தலின் அவசியத் தன்மையும், நூலின் பெயரும், தெய்வத்தின் இலக்கணங்களும் இதுவிளக்குவதாம்.

ஏனைய பலவிதநெறிகளையும் மலைவுபடவிரித்துக் கூறித் திகைப்பிக்கும் நூல்கள் போலில்லாமல், திருவருள் பெறுதற்குரிய நேர்வழியாகிய தியானத்

தின் தகுதியை இந்நூல் எடுத்துக்கூறுவதால், நூல் எனவாளாகூருது "நன்னூல்" எனவிதந்தனர் என்க.

வாதபித்த சிலேத்தும நாடிகளின் இயற்கை மாற்றத்தால் விளைகின்ற உடற்பிணி தீரவிரும்பு வோர் செய்யும் மருத்துவ முயற்சிபோல், உயிருக்கு இருவினையின் பாகுபாட்டினல் விளையும் பிறப்பு இறப்பு நோய்களால் ஆன துன்பம் நீங்கி, முத்தியின் பம் சித்திக்க விரும்பும் நல்லோர், தவ மருந்தைக் கொள்வதுமரபு என்பதை "வயா நீங்கற்கா முயலும் மாதவம்" எனக்கூறினுர். அதன்மார்க்கம், ஒழுக்கம், அநுபவம் ஆதிகளை விளக்குதற்குரிய சிறப்பினதாயது "தியாஞநுபூதிநூல்" என்பதாம்.

தவம்பலவகையெனக் கூறுவோர் கூற்றுகளை உள்ளடக்கி, தியானம் ஒன்றே உயர்ந்தது எனவிளக்கி யவாருயிற்று.

சற்குருநாதனது சிறப்புப்பார்வையானது மற்றையோர்காணும் காட்சிபோலின்றி, உலகப் பொருள்களைக் குறிக்கின்ற மனவேறுபாட்டின் வசப் படாமல் தன்முன்நேரும் பக்குவஉயிரை ஞான மோட்சங்களுக்கு உரியதாக்கும் கருணை நிறைந்த தென்பார் "தயாநாட்டம் கோண்டகுரு" என்ருர். பரம்பொருளானது பொதுவினில் அகண்ட (அருவ)த் தன்மையதாயினும், சிறப்பினில் தொண்டர்கள் இதயத்தில் நிலைத்தபாவனைப்படி அவ்வவர்க்கு விரும் பிய வடிவு கொண்டு விளங்கி, பின் ஒன்ருய் அத்து விதமாய் அமையும் குணத்தினதாகும் என்பார், "ஆதியபல் கோடிதெய்வம் ஆகி, ஒன்ருய்" என்ருர்.

தனக்கென ஓர் வடிவேகொள்ளாமல் அவ்வவர் குறித்தவாறு பலவடிவு கொள்வது வஞ்சமன்ருே? எனில், அன்று. தனது திருவருளாற்றலும் கருணை

யும் நிறைந்த சத்தியத்திறம் என்பார், "தோண்டருள் வாழ் உண்மை துணை" என முடித்தார் என்க.

தெய்வம் எங்குளது என வினவுவார்க்கு, "தொண்டர்உள்" என்று விடை கூறியவாறும் ஆயிற்று. தெய்வம் என்றது, தெய்வத்தின் வடிவங்களை, எனக்கொள்க.

கட்டளைக்கலித்துறை

தமிழடி யாகும் எழுத்துரு வும்,சந்த மாமுடியும்,
இமிழ்திரைப் பாரில் எனக்கீந்த வெண்திரு,
இன்பவெள்ளத் (து)
அமிழ்பவர் வேண்டும் தியானுறு பூதியும் ஆங்களித்
[தாள்
சிமிழ்முலைப் பாலமு தங்கொடுத் தாளும் தினமும்
[உண்டே.

பொ - ரை. தமிழ் எழுத்தின் வடிவப்பயிற்சியாகிய அடியையும், சந்தப்புலமையான முடியையும், ஒலிமிக்க கடலாற்சூழப் பெற்ற நிலவுலகில் அடியேனுக்குக் கருணையாற் கொடுத்தருளிய வெண்ணிற மேனியினளான கலைமகள், அருளியற் பேரின்ப வெள்ளத்தில் ஒன்றுபட்டு விளங்கும் பெரியோர்களால் அன்புடன் விரும்பப்படுகின்ற தியானநிட்டையின் அநுபவநிலையினையும் அதுபோன்றே தந்தருளினள். பொற்செப்பினை ஒத்துள்ள தன் அழகிய தனங்களில்தேங்குகின்ற, போகமோட்ச மயமானதும் களங்கமற்றதுமான ஞான அமுதை யான் உண்ணும்படி ஊட்டி (தனது குமாரர்களில் ஒருவனாகவிளங்கும்படி சிறப்புக் கருணையால்) ஆண்டுகொள்ளும் நாளும் வருங்காலத்தில் உள்ளதாகும் எ- று.

வி - ரை. திருவருள் நிறைந்த கலைமகளாவாள், உலகில் இருவினைக்கீடாய் உயிர்கள் கொள்ளும் தூல உடலினைப்போல், தோல், நரம்பு, தசை, உதிரம் முதலிய சத்ததாதுக்களால் அமைந்து, சிலநாளிருந்து தளர்ந்து அழியும் தன்மையின்றி, எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி, புலமை, தவம், என் பவற்றால், அருள் காரணமாக அமைந்துவிளங்கும் திருமேனியுடையாள் என்பதைவிளக்க, "தமிழ் அடியாகும் எழுத்துருவும், சந்தமாம்முடியும்" எனக்கூறியதன்றி, அவ்வடிவைக் கருணையால் தனக்களித்தனள் என்பார், "எனக்குஈந்த" என்றும், சிறிதும் களங்கமின்றிப் புனிதமயமாய், படிகம் போல்விளங்கி, அந்தப்படிகமானது எதிரில் உள்ள பொருள்களின் தன்மையை, தன்னுள் பிறர்காணும்படி காட்டி, தான் இயல்பு மாறாது அமைதல்போல், ஆன்மாக்களின் பக்குவத்துக்கேற்ற அளவில் அருள்புரிந்து தனதுதன்மை கெடாது விளங்குவாள் என்பார் "வெண்திரு" என்றும் கூறினர்.

தியானயோக அநுபவம், பேரின்பப் பக்குவிகளாலேயே விரும்பப்படு மென்பார். "இன்பவெள்ளத்து அமிழ்பவர் வேண்டும் தியாநுபூதி" என்றும், அதனையும் தனக்களித்தனள் என்றும் கூறினர்.

புராணமுறையில் தூலபாவனை கொண்டு ஆராய்ச்சி செய்யுமவர்கள் மனத்தில், சத்தியலோக புவனத்தில் ஆக்கல் தொழில்புரியும் பிரமதேவனது பத்தினிகலைமகளென்றும், கல்விப்புலமை மட்டுமே அவள் கொடுத்தற்கு உரியதென்றும் கொள்ளப் படுமேயன்றி, கடவுள் உருவபேதங்கள் முற்றும் அருவமான பரம்பொருளின் கருணைத்திறம் எனக் கொள்ளும் சமரச நிலையினோர்க்கு, அத்தெய்வத்தின் அங்கமாகிய திருவருட்சத்தியென்றே கொள்ளப்

படுவது உண்மையாதலால், "சிமிழ்முலைப்பால் அமுதம் கொடுத்து ஆளும் தினமும் உண்டு" எனக்கூறிமுடித்தனர்.

திருவிளையாடற் புராணம் அம்மைதுதியில், சரசுவதி, திருமகள், பார்வதி யென்ற மூன்று வடிவும் திருவருட்சத்தி யென்றே என்று கூறப்பட்டுள்ளதறிக. அவ்வாறு திருமேனி கொண்டுள்ள சத்திக்கு, போகம், முத்தியென்ற இரண்டுமே தனங்களா யமைந்ததால், அவற்றினின்றும் சுரந்து பொங்கும் ஞானமயமான பாலமுது ஊட்டும்தினம் உண்டு என, எதிர்நிலைத்தீபமாக வைத்துக்கூறியது, சோம்பலும் செருக்கும் ஆதியவற்றால் தடைபடாமல் (தனக்கும் மாணுக்கருக்கும்) ஊக்கம்பிறத்தற் பொருட்டு என்க.

போகம்என்பது அருளியல் அநுபவ சித்திகளாகிய ஆனந்தபோகம். உலகியலான தூலதேக ஐம்புலப்போகமன்று. முத்தியென்பது மறுபிறப்பின்றித் திருவருளில் ஒன்றுபடும் பரமுத்தியாகிய வீடு. சரியையாதிய மூன்றுசாதனங்களில் நின்றோர் தூலம்விட்டுச் சூக்கும புவனத்தில் சிலகாலம் தங்கி மீளுதற்குரிய பதமுத்தியன்று என்க.

"ஏகபர தத்துவமாம் தெய்வத் தின்பால்
இயைதருவல் லபமாகி இலங்கும் சத்தி
போகம்முத்தி யென்னும்இரு கொங்கை யோடு
பொலிகின்றாள், அவ்விரண்டும் புசிக்க நாடும்
தாகமுடை யவரேமெய்த் தவத்தோர் ஆவார்"

என்று கௌமாரவித்தை நூலும் ஒத்து ஓதியது. (இந்நூல் ஆசிரியர் இயற்றியது) முதற் கவியில் ஆசிரியர் சகள (உருவ) சத்திக்கு வடிவாகிய, அங்கியாய் உள்ள உண்மைப்பொருளான நிட்கள

(அருவ) பரத்தினைக்குறித்தும், இக்கவியில் உண்மைப் பொருளாகிய அருவபரத்துக்கு அங்கமாய்நின்று உயிர்களைக் காரியப்படுத்தும் திருவருட் சத்தியைக் குறித்தும், முறையே கூறித் துதித்துள்ளமை காண்க.

அறுசீர் விருத்தம்

பலகலை தெரிந்திட் டாலும் பத்திமுன் னாக்ச் சொல்லும்
நலமொரு மூன்றுற் றாலும் நண்ணுமா றினைத்தும்
குலவுசீர் எய்தி டாது குருவடி வாதி யாகப் [செய்து
புலவர்செய் தியானம் ஒன்றிற் புக்கவர் கைக்கொள் வாரே.

போ - ரை. ஒருவன் பலவிதநூல்களைக் களங்க மறக் கற்று அறிந்தவனாயினும், பக்தி வைராக்கியம், ஞானம் என்ற நன்னிலை மூன்றினையும் அடைந்திருந் தானாயினும், தான்விரும்பியபடி நற் செயல்கள் எல்லாவற்றையும் இனிதுநடத்தி, திருவருட்சித்தி பெற்ற குமாரவருக்கத்தில் ஒருவனாக விளங்கும் சிறப்பு அடைதல் முடியாததாகும். சற்குருவடிவ முதலாக அறிவிற்சிறந்த உபாசகர்களாற் கொள்ளப் படுகின்ற தியான பாவனை ஒன்றில் ஈடுபட்டோரே அம்மேன்மையை அடைதற்குரி யோராவார் எ - று.

வி-ரை. கற்க, கசடற, கற்பவை, என்னும் தமிழ்மறைப்படி ஒருவன், அனேகவித உத்தம நூல்களைக் கற்றறிந்தானாயினும், அவற்றின் முக்கியப் பகுதி இன்னதென ஆராய்ச்சியாலாவது, போதனா குருவின் அறிவுரையாலாவது தெரிந்து, பரிசுத்த அறிவுமயமாயுள்ள முதல்வனது திருவடிச்சிந்தனை நெறியில் நிற்கும் தகுதிபெறானாயின், அவனது கல்விமுயற்சி பயனற்றுவீணாகுமென்பார் "பலகலை தெரிந்திட்டாலும்" என்றும், பக்தி, வைரக்கியம், ஞானம் என்னும்வற்றில், ஒன்றையோ, இரண் டையோ, மூன்றையுமோ அடைந்தால் போது

மென்பாரைமறுத்து, "மூன்றுஉற்றாலும்" என்றும்கூறி, வேண்டிய வேண்டியவாறு எய்தற்குரிய தவமில்லாத போது ஒருவிதப்பயனும் அடைய முடியாதென்பார், பூர்வபட்சப் பொருளாக "நண்ணுமாறு அனைத்தும் செய்து குலவுசீர் எய்திடாது" என்றும், குருவடிவ நாட்டம் ஆறுவகைச் சமயமூர்த்திகளின், சிவதிசை நாட்டம், விக்கிரகநாட்டம் என்னும் பகுதிகளில் ஏதேனும் ஒன்றைத் தமதுபக்குவ நிலைக்கேற்பப் பற்றிநின்று, தியானசெப முயற்சியில் ஈடுபடும் அறிஞர்களே, எல்லாம் பெறுதற்கு உரியர் என்பார், "குருவடிவு ஆதியாக, புலவர்செய்தியானம் ஒன்றிற் புக்கவர் (குலவுசீர்) கைக்கோள்வார்" என்றும் வகுத்து ஓதினர் என்க.

"அக்கரத்தின் உருவமொன்றும் அறியா மூடன்
ஆனாலும், சாத்திரங்கள் அனைத்தும் தேறும்
மிக்கபுகழ்ப் புலவர்சிகா மணியா னாலும்
விளங்கும்ஒரு மூர்த்தியினை விரும்பி நாடி,
தக்கவண்ணம் பிரசன்னம் கண்டா லன்றிச்
சகம்அறியச் சித்திமுத்தி சாரொண் ணாது
திக்கனைத்தும் நிறைந்தபர தெய்வத் தன்மை
தெரிந்தவர்போற் பிதற்றுகர் வாய்ச் செருக்கு
[வீணே."

என்று கௌமார முறையினும் இவர் வகுத்து ஓதியது காண்க. கல்வியின்பயனாவது தெய்வசிந்தனை யும், திருவருட் பிரசாத விருப்பமும், உலகுக்கு உதவி புரியும் கருணையுமேயன்றி, பலர்கேட்டுமகிழ வாயளவிற்பேசித்திரிதல் அன்றென்பதை இக்கவி விளக்கிற்று.

# நூல்

## எண்சீர்விருத்தங்கள்

சித்திமுத்தி என்னும்இரு பேறும் பெற்றுத்
திரும்பாத வீட்டினிற்போய்ச் சேரு வார்க்குப்,
பத்தி,வைராக் கிய,ஞானம், என்னும் மூன்றும்
பக்குவமே: அவர்நடக்கும் பாதை தன்னைச்
சத்தியமாய் யோசிக்கில் தியானம் ஒன்றே :
சகுணமே அதற்கிசைவாம் : சார்ந்து நின்றால்
புத்தியினுக் கடங்காநிர்க் குணமும் தோன்றும் :
பூர்வதவப் பயனில்லார் பொருந்தி டாரே.

பொ-ரை. *அணிமாமுதலான எட்டுவிதச் சித்திகளும், சாலோகமுதலிய மூவகைப் பதமுத்திகளுமாக மேலோர்களால் சொல்லப்படுகின்ற இருவகைப் பயன்களையும் தமது உபாசனைக்கடவுளால் உதவப்பெற்று, மறுபிறவிக்கு மீண்டுவரவிடாத ஐக்கமுத்தியிடத்து, தற்போத முனைப்பாகிய (நானென்ற) செய்கை முற்றும்கழன்று, ஒன்றுபடும் பேற்றினை வருங்காலத்திற் பெறுதற்குரிய தொண்டர்கட்கு, அன்பு, நிராசை மெய்யுணர்வு என்று கூறப்படும் மூவகைகளும் முத்திக்கு ஏதுவான படிகளேயாம். அவர்கள் அம்முத்தியைப் பெறுதற்குச் செல்லும் வழியாது? என்று நேர்மையுடன் ஆராயுமிடத்து தெய்வசிந்தனையான முயற்சி ஒன்றேயாம், அவ்விதத் தியானத்துக்கு தெய்வத்தின் உருவபாவனையே சிறந்ததுஆகும். அந்த உருவபாவனையில் நிலைத்தால் அதன் முடிவில் சிவஅறிவுக்கு அமையாத அருவத் தோற்றமும் கூடுவதாகும். இதற்கு முன்னைய பிறவிகளில் செய்ததவத் தொடர்பு இல்லாதோர் இசையாரென்பதாம் ஏ : அசை*

வி-ரை. சித்தி, முத்தி, வீடு என்பவற்றை முறையே பெறுவோர்க்குரிய பக்குவ விவரமும், நெறியும், குறிக்கோளும், பின்விளைவும், அதிகாரி அநதிகாரி (தகுதியுடையோர்-அல்லாதார்) இயல்பும் இக்கவி உணர்த்திற்று.

சித்திவகைகளும், பதமுத்தி பேதங்களும், உபாசகர்களின் தவத்தின் அளவுக்கேற்ப இறைவனாற் கொடுக்கப்படுவதென்பார் "இருபேறும் பெற்று" என்றும், ஐக்கமுத்தியானது, தானும் தலைவனும் என்றபேதம் நீங்க இரும்புஉண்ட நீர்போல் ஒன்று படுவதென்பார், "போய்ச்சேருவார்க்கு" என்றும் கூறினார். முடிவான முத்தியொன்றே சாலும், சித்திகள் எதற்கு? எனக்கூறுவார் கூற்றைமறுத்து, சித்தி இறைவனருளின் அங்கமாக அமைவது ஆதலின், அதைக்கொண்டு தான்முன்னிலையாய் நின்று உலகுக்கு வேண்டிய நன்மைகளை இயற்றி, பின்பு முத்தியடைவதே சிறப்பு என விளக்கியவாறாயிற்று.

ஆகவே, உலக நன்மையின் பொருட்டுச் சித்தியும், தன்பொருட்டு முத்தியும், இன்றியமையாதது என்பதுகருத்து. உலகம் எப்படியானால் என்ன? யானொருவன் முத்தியுற்றால்போதும் எனமுயல்பவன் கருணையில்லாதவன் ஆதலின், அவன் பெறும் முத்தி, கருணையுடைய அடியவர்களால் புகழப்படுவது அன்றென்பதும், 'மங்கலமில்லாத மகளின் மகப்பேறு போல் அவமதிக்கப் படுமென்பதும் பெற்றாம்.

"சித்தியொன் றேனும் தெரியப் புரிந்திடான்
முத்தியும் சாவேயென் றுந்தீபற"

எனச்சதகவுந்திநூல் கூறிற்று.

பத்தியேமுத்தி, வைராகமேமுத்தி, ஞானமே முத்தி, எனத்தனித்தனி கூறிமுடிவு கொள்ளும் மதத்

தினரை ஒருங்கே மறுத்து, அவை அதற்கு உரியசாதனங்களேயன்றி முத்திஆகா என்பார், "பக்குவமே" என்று பிரிநிலை ஏகாரப் பொருளில் வைத்துக் கூறினார்.

தவத்தின் பிரிவாவன, தலசேவை, புனிதநீராடல், தோத்திரபாராயணம், திருவலகுஇடல், வலம்வருதல், திருமெழுக்கிடல், திருவிளக்கேற்றல், திருமாலை தொடுத்தல், அருச்சனை முதலிய பல இருப்பினும், ஊன்றி விசாரிக்குங்கால், மூர்த்தியின் உருவசிந்தனை யான தியானம் ஒன்றே நேர்வழியும், மற்றவை அதன் அங்கமுமாய் அமையுமென்பார், "சத்தியமாய் யோசிக்கில் தியானம் ஒன்றே" என்றும், அவ்வாறு தியானிப்பதற்கு அவயவப்பொலிவுடன் உள்ள உருவ மேபொருத்தமென்றும், அவ்வாறுபற்றி நின்ற முதிர்வில், அருவக்காட்சி கைவருமென்றும், விளக்கு வார், "சகுணமே அதற்கு இசைவு ஆம்—சார்ந்துநின்றால்—புத்தியினுக்கு அடங்கா நிர்க்குணமும் தோன்றும்" என்று விதந்தனர்.

முற்பிறவியின் தவமுடையவரே இந்நெறிக்கு உரியார் என்று அதிகாரி இலக்கணம் கூறி, அத்தவ மில்லாதவர் "பொருந்திடார்." என்று எதிர் மறை முகத்தால் அநதிகாரியிலக்கணம் கூறி முடித்தார்.

நால்வர்கள் ஆழ்வாராதியர் செய்தசித்திகள் யாவும் உலகநன்மை குறித்தவையும், உருவவழி பாட்டுத்தவப்பயனே யென்பதும்தெளிவு. 1

தற்சீவ சாட்சிகுரு வடிவம் என்னச்
சாற்றும்நிலை சமரசத்தோர் தமக்கே ஆகும் ;
முற்சீவன் செய்ததவம் முதிர்ந்தால் உண்டாம் ;
மூவிரண்டு சமயத்து மூர்த்தி மாரை

நற்சீவ திசையாகத் தியானிப் போர்க்கு
ஞானம்எய்தும் பற்பலரும் நாடு மாறு
பிற்சீவர் செய்துவைக்கும் உருவ நாட்டம்
பிடித்தோரும் தக்கபயன் பெறுவார் அன்றே.

பொ-ரை. தன்உயிரினிடத்து இயல்பாக ஆதி காலந்தொட்டுக் கலந்து நிற்கும் பொருளான பரம், குருவடிவமாகும் என்பதை உண்மையாக அறிந்து கூறும் அநுபவ நிலேயானது, சமயவாதத் தன்மை முற்றும் கழன்று சமரசமாகக்கொள்ளும் மேற்பக் குவிகட்கே பொருந்தும். ஆனுல் அத்தகைச் சமரசவுணர்வு தன்உயிரானது முன்சென்மங்களிற் செய்துள்ள புண்ணியம் நிறைவுற்றபோது ஏற்படத் தக்கது. அவ்வாருக, சண்மதமூர்த்திகளில் ஒவ் வொன்றையும் கண்ணிமைத்தல், கையமர்த்தல், வாய்நகைத்தல் பேசுதல் முதலியவான இயக்க முடைய தன்மையில் மனதிற்சிந்திக்கின்ற உபாசகர் கட்கு முத்திக்குரிய நுணுக்கமான உண்மையறிவு ஏற்படுவதாகும். அதுவன்றி. உலகிற்பலரும் காணு மாறு பொதுவாக அமைத்து நிறுவப்பெற்றதாய். இடையில் சிற்பர்களாற்செய்துள்ள திருவுருவத்தைக் (விக்கிரக வடிவமாக) கைக்கொண்டுதியானிப் போர்களும் அதற்கேற்றபயனேயடைவர் எ-று.

வி-ரை. தியானபாவனேச் சகளத்தின் மூன்று விதவிவரமும், அவற்றின் பயன்களும், வரிசைக்கிர மத்தில் இக்கவிகூறியதாம்.

உயிர்கட்கு உற்றதுணேயாக என்றும் உள்ளபரம் பொருளே, சாக்கிரத்தில்தமக்கு முன்னிலேப்பட்டு உபதேசித்த குருநாதனது திருவுருவம் என்று கொள்வது சமரச நிச்சயத்தின் மேம்பட்ட உத்தமபக்குவிகட்கேயாகும் என்பார், “சமரசத்தோர் தமக்கேஆகும்” என்ருர்.

எல்லாமதங்களும், குருநாதனது திருவுளக் கருணையினால் ஆதியிலமைக்கப் பெற்றனவேயென்று அறியும் விவேகமே சமரச பக்குவமென்க. "சாற்றும் நிலை" எனப் பொதுப்படக் கூறினரேனும், "சமரசத் தோர்" என்றவிசேடத்தால், வாயளவில் கற்றுக்கூறும் வெற்றுரையாளர்களை விலக்கியும், அந்தரங்க உபாசனைமூலம் அதில் உறுதிபிறந்து செருக்கின்றி ஆன்மசகோதர ஒற்றுமையால் பக்குவிகள் வினவக் கூறும் பெரியோரைத்தழுவியும், பொருள் கொள்ளு தல்முறை. முற்பிறவிகளில் பலமதங்களில் பலவாறுழன்று சிறிதுசிறிதாகக் காரியப்பட்டுவந்த தொடர்பால் இந்நிலை உதிக்கும் என்பாராய். "முற்சீவன் செய்ததவம் முதிர்ந்தால் உண்டாம்" என விதந்தனர். இது "முடிந்ததுமுடித்தல்" என்ற உத்தி என்க.

வைதிக சமயம் என்று ஆன்றோர்தழுவிக் கொள்ளும்படி வேதங்களிலமைந்து, சுத்தபரப்பிர மத்தின் அங்கமான திருவருட்சத்தியின் இயக்கால் காரியப்படுவனவான, சமயம், தன்மை, கடவுள் களாவன.

| சமயம் | தன்மை | கடவுள் |
|---|---|---|
| சௌரம் | ஒளித்தன்மை | சூரியன் |
| சைவம் | ஒடுக்குந்தன்மை | சிவன் |
| சாத்தேயம் | உதவுந்தன்மை | சத்தி |
| வைணவம் | காக்குந்தன்மை | விட்டுணு |
| காணபத்தியம் | விக்கினநிவர்த்தி | கணபதி |
| கௌமாரம் | ஞானஉபதேசம் | குமாரன் |

என்ற ஆறுசமயங்களில் ஒன்றை, தம்பக்குவத்துக்கு ஏற்ப உயர்ந்த அருள்வடிவாகச் சீவதிசையாகத் தியானிப்பவர்கட்கு, முத்திக்கு ஏதுவான ஞானம்

உண்டாகும் என்பதை விளக்க" சீவதிசையாகத் தியானிப்போர்க்கு ஞானம் எய்தும்" என்றார். சீவதிசை- உயிர்த்தன்மை.

அன்பு, ஆசாரம், அடக்கம் முதலிய ஒழுக்கமுள்ள உத்தமர்களும், ஆணவம், நீசத்தனம், பிடிவாத முதலிய தீமையுள்ள சாமானியரும் பறவை மிருகாதிய உயிர்களும் எளிதிற் காணும்படி செம்பாலும், சிலையாலும், சுண்ணம், மண், பொன், வெள்ளி ஓவியம் இவற்றாலும் சிற்பக்கணக்கின்படி, புராண வரலாற்றுக்கிசைய மக்களால் செய்து நிறுவப் பெற்றுள்ள வடிவங்களில், மனம் செலுத்தித் தியானிப்பவர்களும், அதற்கேற்ற பயன்களைத் தடையின்றிப்பெறுவர் பயன் வீணாகாது என்பார் சீவர்செய்துவைக்கும் உருவ நாட்டம் பிடித்தோரும் தக்க பயன் பெறுவர்" என்றார். பிடித்தோரும் என்ற உம்மை இறந்ததுதழுவியதாம் தற்சீவ பிற்சீவர். முற்சீவன் என்றன. தன், முன், பின், என்பவற்றின் விகாரம்.

அன்பர்கள் வழிபட்டு உய்வதற்குரிய சாதன முறைநான்கில், சரியை-கிரியை கட்குரிய அங்கமான விக்கிரகங்களும், யோக பாதத்தினர்க்குரியதான சீவ திசைவடிவங்களும், அதன்மேற் போந்தஞானபக்குவத் தினர்க்குரிய துணையான, சற்குருவடிவ நாட்டமும், அமைவன என்பதைவிளக்கி, 'பிடித்தோரும்' என உம்மைகொடுத்தும், சீவதிசை உபாசகர்க்கு "ஞானம் எய்தும்" எனச்சிறப்பித்தும், சமரசத்தோர் தமக்கே ஆகும் எனப்பிரிநிலைப் பொருளில் விசேடித்தும், உ கூறினர்.

சத்குணபரம் பரைநாட்டம் பெற்ற பல்லோர்
தனிவீட்டிற் புக்கநலம் சாற்றக் கேட்டும்
மிகுபனுவல் ஆய்ந்தமதி தன்னைக் கொண்டு
மேலான நிர்க்குணத்தை விரும்பி நாடல்

தகுதியல்ல முடிந்தபொருள் அது : ஆனாலும்
சகளத்தால் அன்றி அதைச் சாரொண் ணாது
வெகுவிதத்தெய் வங்களுண்டென் றழல வேண்டாம்
விளம்பும் ஒன்றே பலவடிவா விளங்கும் மெய்யே.

பொ - ரை. குருசிடமரபில் உபதேச முறைப்படி மூர்த்திவடிவ பாவனை முறையைக் கைக்கொண்டு விளங்கிய அன்பர்கள், உலகநன்மைக்கானபல அருளாடல் செய்து, மறுபிறவியற்ற முத்தியிற் கலந்ததான மெய்க்கதைகளைக் கேட்டிருந்தும், பல நூல்களைச்சந்தேக விபரீதமறத் தெரிந்த அறிவைக் கொண்டு எல்லாவற்றினும்மேம் பட்ட அருவத்தை அன்புடன் தியானிக்கப்புகுவது சிறப்பன்று. முடிவில் உள்ள உண்மைப் பொருள் அந்த அருவமான நிட்களமேயானாலும், உருவவழி பாட்டின்வழி சென்றல்லது அந்த நிர்க்குண (அருவ) அநுபவத்தைப் பொருந்தி இன்பமுறமுடியாது. பலவிதமான மூர்த்திபேதங்கள் இருக்கின்றனவேயென்று மனம் திகைக்கக் கூடாது. மேலோர்களாற் சிறந்ததென்று சொல்லப் படுகின்ற பரம் பொருள் ஒன்றே புராண சிற்பங் களாற் கூறப்பட்ட பலவடிவும்கொண்டு விளங்கு வதாம் எ - று.

வி - ரை. கற்றதுகொண்டு அருவ நாட்டங் கொள்ளல் தவறு என்பதும், உருவபாவனை மூலம் எய்தற்பாலது அது என்பதும், தெய்வத்தின் வல்லமையும், அது ஒன்றேயென்பதும், பலவடிவம் பெறுமென்பதும் நுதலிற்று.

கல்விகேள்வியில்லாத ஒருவன் தவறு செய்வது மரபு. பல நூல்களை நன்குபயின்று பொருள் தெரிந்தும், உருவவழிபாடு செய்தபலர் வழிவழியாக முத்தி பெற்றார்கள் என்றவரலாறு உணர்ந்திருந்தும், அம் முறையேசென்று பேரின்ப முறவிழையாமல்,

வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாமல் மேம்பட்டுள்ள, அருவ (நிர்க்குண) ப்பிரம உபாசனையில் செல்வது விளக்கேந்திக்கொண்டு கிணற்றில் வீழ்ந்தவன் கதை போலும் என்பார் 'கேட்டும் நாடல் தகுதி அல்ல'' என்றார்.

முடிவிற்பெறுவது நிர்க்குண (அருவ) அநுபவம் என்பது உண்மை யானபோது, முதலிற் சகுண (உருவ) பாவனையிற் காலம் கழியாமல் அதனையே பற்றுதல் முறைதானே யென்பாரை நோக்கி, உருவ நாட்ட உபாசனை முதிர்ந்து அது பலித்தல் வேண்டும் என்பதை வலியுறுத்த "சகளத்தால் அன்றி அதைச்சார ஒண்ணாது'' என்றார்.

அருவமான நிர்க்குண பாவனையை ஒருவன் ஆரம்பகாலத்தில் மனத்தால் தியானிக்க முயல்வது "வானத்தில் ஏணிசாத்துதல் போலவும் கீழ்அத்திவாரமின்றி, மேல்மாடிவீடு அமைப்பது போலவும் கொள்ளப் படுவதாகும் என்க. உருவபாவனையாலல் மனம் பற்றுதற்கு முன்னிலையாயிருந்து, மனம் நிலைத்தபின் அது கரைந்து பாவனைக்கு எட்டாத அருவ நாட்டத்தில் சேர்க்கும் என்பதாயிற்று.

சகுண உருவ பேதங்கள் பலவாயிருப்பதால், எவ் வுருவத்தைப் பற்றித்தியானிப்பது, எதனை விடுவது என்று மலையும் மாணவர் தெளிவுறும்படி 'ஏது பாவித்திடினும் அது வாகவந்தருள் செய்யும்' பரம் பொருள் ஒன்றே என்று தேற்றுவதற்கு "வேதுவிதத் தெய்வங்கள் உண்டென்று உழலவேண்டாம். விளம்பும் ஒன்றே பலவடிவா விளங்கும்'' என முடித்தார்.

அங்கங்களோடுள்ள உருவத்தோடுள்ளநாம், அத் தகைய உருவத்தை நாடியே தேறவேண்டு மென்பது கருத்து.

பகர்தரும்நிட் களஃ(ம்) மனத்துக் (கு) எட்டி டாது
பழையதவ மில்லாத பாவ மாந்தர்
திகழ் தருதாய் முலை நீத்துத் தந்தை மார்பின்
சிறுமுலை வேட்(டு) அயர்மகவில் திகைப்பார்; அன்றே

என்று கௌமார முறை நூல்கூறிற்று. 3

நீராலங் கட்டியெனத் தடித்தல் போலும்
நெய்உறைந்து கையினிடை நிலவல் போலும்
பேராகம் கொண்டுதெய்வம் நிற்கு மாகில்
பெருமை குன்றும் எனக்கருதிப் பேசொண் ணுத
சீராரும் நிர்க்குணமே என்று கூவித்
திருவருட்சத் தியை யிகழ்ந்து செத்துப் போவார்க்(கு)
ஈராறு! சமயத்தோர் அடையும் பேறும்
எய்திடா(து) எனத்தெளிவ தெளிதன் றம்மா.

போ-ரை. *தண்ணீரானது குளிர்ச்சியால் இறுகிப் பனிக்கட்டி வடிவிலமைதல் போன்றும், அதுபோல் நெய்கெட்டியாகிக் கையில் இருப்பது போன்றும், அருவமானபரம், பெயரும் வடிவமும் பெற்று விளங்கு மாறல் அத்தெய்வத்துக்குப் பரத்துவச்சிறப்பு குறையும் என்று கருதி வாயாற் கூற இயலாத அருவப் பொருளே உண்மை எனக்கொண்டு கூக்குரலிட்டுப் பேசி, பெயரும் வடிவமும் கொண்டு நிட்கள (அருவமான) பரத்துக்கு அங்கமாயுள்ள திருவருட் சத்தியை (உருவத்தை) வெறுத்து, அழிந்தொழியும் அருவ உபாசகர் கட்கு, அகம் புறம் என்ற பன்னிருவகைப் பட்ட சமயவாதிகள் (உருவவழிபாட்டினர்) பெறுவதற்குரிய இன்பப்பேறுகள் யாதொன்றும் எய்தமாட்டார்கள் எனத்தெளிவதும் எளியதல்ல எ - று. அம்மா - அசை.*

(வி - ரை.) நிட்களம் சகளம் ஆதற்குரிய மாடுத்துக்காட்டுகளும். மாறுபட்டோரது இழிவும், உண்மை உணர்ச்சியின் அருமையும், அறிவிப்பதாகும் இக்கவி.

பெயர், வடிவம், குணம், குறிஎன்ற இவையாவு மின்றி, அருவமாய் எங்கும் நிறைந்த வெளிமயமான தெய்வமானது, அன்பர்கள் தமது முன்னைய நல்வினைக்கேற்ப அன்புஏற்பட்டு, தங்கள் குருநாதரால் உபதேசித்தபடி மந்திரம் ஓதுதலும், மூர்த்தி வடிவத் தியானமும்செய்து, தவமுதிர்ந்தபோது கருணையால் அருவபரம் அவர்பாவனைப்படி, திருமேனிகொண்டு, அவரவர்முன் காட்சிதருமாறல், அந்த அருவ நிர்க்குணபரத்தின் பெருமை குறையும் என்று, எண்ணுவோரை நோக்கி, அருவபரம் உருவம் கொள்வதானது, நீரும், நெய்யும், தண்மையால் உருப்பெறுதல்போலுமென்றும், பின், முன்போலவே நெகிழ்ந்து இயல்பு குறையாமல் விளங்குதலும் போல், பரமும், உபாசகனது நிலைத்தபாவனையளவில் உருக்கொண்டருளினும், இயல்பாய் முன்போலவே அருவமாயமையும்; இதனால் அதன்வல்லமை குறையாமல் விளங்கும் என்றும்விளக்க, "நீர்ஆலம்காட்டி....நிலவல் போலும்" எனஉவமானமுகத்தால் விளக்கினர். பின் பற்றிவரும் மாணவர்கட்கு ஆராய்ச்சியால் விளையும் ஐயம், மறுப்பு, முதலியவற்றைக் களைதற்குஎன்க.

நீர், நெய்களின் திரட்சிக்கு உலகிலுள்ள தண்மை காரணமாதல்போல, அருவபரம், உருவமாதற்கு உபாசகனது பாசபந்தவெப்பம் இல்லாத, கருணையின் தண்மையேகாரணமென்க. இதன்விவரமறியாமல், நிர்க்குணமே. (அருவமே) உண்மை என்று சத்தமிட்டுவீணேபேசி, வாதிட்டு இறப்போர், இவ்வுலக சுகம், முத்திப்பேறு, என்பவற்றில் எதுவும்

அடையார் என்பதை "ஈராறுசயமத்தோர்....எய்திடார்" என்றும், அது தெரிவதும் அருமையென்பதை, "தேளிவதுஎளிதன்றுஎன்றும்" கூறினர். நிர்க்குணமே என்றுகூவி என்றதனால் அவரிடமுள்ளது வாய்முழக்க மன்றி, உடலைமறந்தநிலையில் அருவக்காட்சிகண்ட அநுபவமன்று என்பதும்பெறும்.

வழிபாட்டினைப் பெறுதற்குத் திருவடிகளும், துதிகளைவினவச் செவிகளும், காண்பதற்குக்கண் ணும், அருள்மொழிகூறவாயும், இல்லாத பர வெளியை, உடல், மனம், முதலியவற்றிற்கட்டுண்ட உயிர்கள் எளிதில் அப்பரத்தை எய்திப்பயன் பெறுதல் இயலாத ஒன்று, என்பதுகருத்து. 4

இகம்பரம்என் றுரைக்கும்இரு தலத்துள் ளாரும்
ஏத்தேடுக்கும் பேருவாழ்வுக்(கு) இச்சை கோண்டோர்
திகம்பரமாம் போதுவடிவைக் கருதோண் ணாது:
திருவுருவாத் தியானித்தே தேற வேண்டும்:
அகம்புறம்என்(று) ஐயமுற்று வருந்த வேண்டாம்:
அவ்விரண்டும் மனவேளியில் அடங்கு மால்,தான்
முகம்பிரசன் னமதாகத் தோற்றும் வண்ணம்
முயலலாம்: களங்கமற்ற முறையும் ஈதே.

பொ-ரை. இம்மை மறுமைஎன்று ஆன்றோர் நூல்கள் கூறுகின்ற இரண்டுஉலகத்துள்ளவர்களான மனிதர் தேவர்என்பவர்களால் போற்றத்தக்க முத்தி யாகியபெரும்பேற்றுக்கு விருப்பமுற்ற அறிஞரா வோர், எட்டுத்திசையினும் பரவியுள்ள பொதுவான அருவ (நிட்கள)ப்பொருளைத்தியானிப்பது கூடாது. சிறப்பான திருவுருவ பாவனையே மேற்கண்ட மேல் நிலைக்குஉரியதென்று தெளிவுபெறவேண்டும். அப் படி மூர்த்தியைத் தியானிப்பது தேகத்துக்குப்

புறம்பிலா, உள்ளிடத்திலா என்றெண்ணி வருந்த வேண்டுவதில்லை. அப்பகுதி இரண்டுமே மனவெளிக்குள் அமைவனவாகும். தமதுஉபாசனைமூர்த்தியினது முகம்முதலிய பகுதிகள் முன்னிலையா விளக்கமாகத் தெரியும்வகையில் பற்றித் தியானிக்கக்கடவர். குற்ற மற்றமுறையிதுவேயாம் எ - று.

வி-ரை. இவ்வுலகத்துக்கும் மறுஉலகத்துக்கும் மேற்பட்டபயனை விரும்புவோர் கைக்கொள்ளும் முடிவும், விலக்கவேண்டிய நிலையும், பாவிக்க வேண்டிய, உண்மைநெறியும் இஃது ஓதியதென்க.

அசுத்தமாயாவுலகமாகிய இகலோக போகங்களென்று கூறப்பெறும் தூலவுடம்பின் காரியமான உண்ணல், உடுத்தல், பூசல், புனைதல், புணர்தல், உறங்கல் முதலியவற்றில் உழலும் மனிதர்களும், சுத்தமாயாபுவனமாகிய சுவர்க்க லோக போகங்கள் என்று ஓதப்படும் சூக்கும உடம்பின் தொழிற்பாடான அரமகளிர் இன்பம், அமுதமுண்ணல் கற்பக நீழலிருக்கை முதலியவற்றிற் சிக்கியுழலும் தேவர்களும், தாம்நுகரும் அவை, மனமுதலிய கரணங்களைக் கொண்டு அநுபவிக்கும் தன்மையின ஆதல்பற்றி, கருவிகரணங்கள் அனைத்தும் ஓய்ந்த அதீதநிலையான முத்தியைப் பெரிதெனப்புகழ்ந்து வாழ்த்துவது கருத்தொத்தமுடிவு. ஆதலால் "இருதலத்து உள்ளாரும்......பெருவாழ்வு" என்றும், அத்தகைய முத்திப் பேற்றை விரும்பினோர் சகளவழிபாடுசெய்தே பெறுதல் சிறப்பு என்பதை "போதுவடிவைக்கருதோண்ணாது" எனஎதிர் மறைமுகத்தால் மறுத்தும், "திருவுருவாய்த் தியானித்தே தேறவேண்டும்" எனத் தேற்றப்பொருளில் உடன்படுத்தியும் கூறினர்.

தெய்வவடிவைத்தியானிப்பது மனத்தின் உட்பக்கத்திலா, தேகத்தின் வெளிப்பக்கத்திலா, என்றசந்

தேகம் உபாசகர்கட்கு ஆரம்பக் காலத்தில் உண்டா வதுஇயல்பு. ஆதலால் அதனைத்தெளிவுறுத்தும் "பொருட்டு "ஐயமுற்றுவருந்தவேண்டாம்" என்றும், தூலக்கண்ணால் காணும்வெளிதவிர, சூக்குமத்திற் (மனதின்உள்ளே) க்காணும்வெளியானது, உடம்புக் குள் பாவித்தாலும், உடலுக்கு வெளியிற்பாவித் தாலும், அதுமனத்தின் நிலையேயன்றி தூலமான உலகவெளியன்று என்பதை "அவ்விரண்டும் மனவெளி யில் அடங்கும்" என்றும், உபாசகர் எவ்விதம் பாவித் தால் மூர்த்திவடிவம் தமக்குச் செம்மையாகப்புலப் படுமோ, அப்படிச் செய்க என்பதை "முகம்பிரசன்ன மதாக................முயலலாம் முறையிது." என்றும் கூறினர். 5

எந்தவித மூர்த்தியையா னாலும் நேரே
இருவிழியாற் கண்டுதொழு(து) இறைஞ்சின் அன்றிப்
பந்தம்அறு தேனத்தேளிந்து துணிந்து பாடு
படும்அவர்கள் எல்லோரும் பகரக் கேண்மோ!
உந்தமக்கு மந்திரம்ஓர் துணையன்று: ஏனும்
ஒழிப்ப(து)இயல் பன்(று) அதனால் ஒருசோல்லாகி
சிந்தனையின் உதவியின்றி காவும் சோல்லும்
திறத்தினதாம் பழக்க(ம்)மிகச் செய்யில் நன்றே.

பொ-ரை. நான்குவேதங்களிற்கூறும் அகச்சமய மூர்த்திகளில் அல்லது புறம்பான வேறு தெய்வவடி வங்கள் ஏதாவது ஒன்றை கண்முன் நேரேகண்டு வணங்கினாலன்றி, (வேறு எவ்விதத்தாலும்), உடலையேதானென்று எண்ணியுழல் வதனால் உண்டா கின்ற இருவினைத்துன்பம் நீங்காது, எனத்தேறி, ஊக்கத்துடன் தியான முயற்சியில்பழகும் உத்த மரானோர்களான அனைவர்களும், யான்சொல்லும் உண்மையான மொழியைக் கேட்பீர்களாக.

உங்களுக்குச் செபித்தற்குரிய திருநாம மந்திரங்கள் மட்டும் முக்கியமான பற்றுக்கோடல்ல. (மனத்திலும் பாவனையிருக்கவேண்டும்) ஆயினும் அதை அறவே நீக்குவதும் முறையன்று. அம்மந்திரங்கள் எழுத்திற் குறைந்த ஒருவார்த்தையாயிருப்பது நலம். மேலும் மனத்தின் முயற்சியின்றி நாவுமட்டும் சொல்லத்தக்க பயிற்சியை அதிகமாகப் பெற்றிருப்பது மிகவும் நன்மை தருவதாகும். ஏ: அசை

வி - ரை பந்தநீக்கமும், முத்திப்பேறும் பெற விரும்பினோர்க்கு மந்திரங்கள் அங்கமே (துணையே) என்றும், அதனைக்கைக்கொள்ளு முறையும், இக்கவி விளக்கியதென்க.

தியானமுயற்சியில் துணிவும் ஊக்கமும் கொண்டு முயலும் தீவிரபக்குவிகளைநோக்கி, இக்கவியெழுந்தது ஆதலின், அத்தகையார், சொப்பனக் காட்சி, நிட்டைக்காட்சி, முதலிய ஆரம்ப அநுபூதிகளைக்கண்ட அளவில் மனம் மகிழ்வுற்று, தவமுயற்சியில் தளர்வுறும் மந்தர்கள்போலின்றி, தூலக்கண் முன்காட்சிபெறுதலே கடமையென்று உறுதியுடன் உழைப்பார்கள் என்பதும், அப்படிக்கண்டாலன்றி பந்தம்நீங்கி முத்தியுறுதல் இயலாது என்பதும் விளங்க. "நேரேகண்டு... ..எல்லோரும்" எனமுற்றும் மைகொடுத்து விளித்தார்.

அவர்கள்மனம் ஐம்புல விடயங்களில் செல்லாமல் நீண்டபயிற்சியால் மூர்த்திபாவனையில் ஒடுங்கிநிற்கும் ஆதலின், அதற்குரிய மந்திரசெபத்தை விடுவர், அப்படி முற்றும்விடுவதும் தவறு, பிரணவம் ஒன்று, பீசஅக்கரம் பல கொண்டுநீண்டமூல மந்திரம், சேர்த்துச், செபிப்பதுவேண்டாம் என்பார் "ஒருசோல்லாகி" என்றார். ஏனெனில் அப்படிவிரிந்த

மந்திரமிருப்பின் அவற்றை முறைதவருது செபிப்பதில் மனம்ஈடுபடும் அல்லாமல், மனத்தில் வடிவ பாவனையமையாதாகும். ஆகவேமனம் உருவத்தைப் பற்றியும், மந்திரத்தை நாவானது தானே சொல்லுமளவில் பயிற்சியிருப்பதும் நலமென்ருர். ஆகவே தான். ராம, முருக-சிவ, என்பனபோன்ற மந்திரங்கள், பயனுள்ள சிறுசொற்களாயமைந்துள்ளன. விரிந்தமந்திரங்கள் வேண்டியது இன்று என்பது ஆசிரியர்கருத்தன்று. ஆரம்ப, மத்திய பக்குவிகள் கைக்கொள்ளற்குரியனவாம் என்பது குறிப்பாயிற்று.

நான்மறக்கினும் சொல்லும் நா-என்ற சுந்தரர் கருத்தை ஒட்டி-சிந்தனையின் உதவியின்றி நாவும் சொல்லும் திறம், எனச்சிறப்பித்தாரென்க. 6

கண்டனஎல் லாம்தனது தெய்வ மாகக்
 கருதிவணங் கிடும்நிலைகை வந்திட் டாலும்
கொண்டபிடி நழுவாமல் தியானம் செய்து
 குறித்த உருச் சாக்கிரத்திற் குலவப் பெற்று
விண்டமொழிக்(கு) உத்தாரம் விளம்பக் கேட்டு
 விரும்பியவா முடித்தருளும் வீறும் தோய்ந்து
மண்டலமும் விண்டலமும் மதிக்க வாழ்ந்து
 மாசற்ற வீடடைந்தோர் வல்லோர் தாமே.

போ - ரை. தெய்வ உபாசகர்பலருள், தனக்கு முன்னிலையாகக் காணப்படுகிற பொருள்கள் பலவும், தனது உபாசனைக்குரிய தெய்வமாகவே உறுதிசெய்து வணங்குகின்ற மேலான பக்குவநிலையை ஒரு சிலர் அடையப்பெற்ருராயினும் அதனுல் மகிழ்ச்சியடையாமல் உபாசனைத் தொடக்கத்திற் கொண்ட தியான சிந்தனையின் உறுதிப்பாடு குறைவுபடாதபடி சிந்தனை செய்யவேண்டும். மேலும், தன்னுல் தியானிக்கப்

பட்ட தெய்வவடிவக் காட்சியானது, தனது தூலக் கண்முன்தோன்றுமளவுக்கு முயலவேண்டும். தன் விண்ணப் பத்துக்கேற்ற அநுக்கிரக அருளுரை அம்மூர்த்தி சொல்லப்பெறுவது வேண்டும். தனது உள்ளத்தில் விரும்பியபடி நற்செயல்களை செய்யத் தக்க திருவருட்சித்தியைப் பெறவேண்டும், இவ்வுலக மும் அவ்வுலகமும் புகழும் படிவாழ்ந்து, மாயையைக் கடந்த பரமுத்தியில்சேர்ந்தோராயின், அத்தகையோர் மிக்கமேன்யுடையோரேயாம் எ—று.

வி - ரை. எல்லாப்பொருள்களும் தன் மூர்த்தி வடிவாகக் கருதும் சகசநாட்டம் கைவரப் பெற்று லும், அவ்வளவில் மகிழ்ச்சியுருமல் மேலும் முயன்று முத்தியுறும் சிறப்பினை இப்பாடல் விளக்குவதாம்.

உபாசனை முறையில் ஈடுபட்டு, தியான சிந்தனை செய்யும் ஒவ்வொருவருக்கும் முதலில் உடல் முதலிய உலகப் பொருள்களே மனதிற்றோன்றும். தெய்வ உருவம், பாவனையில் அமையாமலிருப்பதும் பின் தளராத முயற்சியினுல் மனமொடுங்கிய நிட்டையில் தெய்வக்காட்சி, அநுபவங்கள் ஏற்படுவதும் மீண்டும் மனம் விரிந்த போது, உலகப்பொருளே காண்பதும், பின்பு பாவனை முதிர்ந்த போது, எல்லாப்பொருள்களும் தனது உபாசனை மூர்த்திவடி வாக நிச்சயித்து, வழிபடுவதான மேல் நிலைச்சகச நாட்டம் அமைவதும் இயல்பாதலின், அத்தகைய மேற்பக்குவிகளை நோக்கி, அவர்கள் தமக்கு நேர்ந்த நிலையைக் கொண்டு, முத்திசோபானமான பரஞானம் சித்தித்ததாக, இறுமாந்து கெடாதவண்ணம் மேல் விளக்கம் கூற இக்கவி எழுந்தது. ஆதலின் "கண்டன எல்லாம் தனது தெய்வமாகக் கருதிவழிபடும் நிலைகை வந்திட்டாலும்" என, உம்மை கொடுத்தும் பிரித்துக் கூறுவதானுர்.

"குக்கல்போல் நம்பிக் குரங்குபோற் பற்றுவோர்
மிக்கமே லோர்களேன் றுந்தீபற"

*சதகவுந்தி (ஆசிரியரியற்றியது)*

என்றவாறு பிடித்தபாவனை விடாதபடி தியானித்து, தெய்வமுன்னிலைக் காட்சிபெறுதல் வேண்டும். அம்மட்டில் நின்று விடாமல், தமது குறைகளைத் தெய்வத்திடம் விண்ணப்பித்து, அதனால் அருளுரை கூறப் பெறுதல் வேண்டும். பின் அம்மொழிப்படி உலகறியச்சித்தி அநுபவம் சேரப்பெறுதல் வேண்டும். அத்தகைய தெய்வீகத் திறமையைக் கண்ட மனிதர்கள். தேவர்கள் ஆதியோர் இவன் மனிதவடிவத் தெய்வம் என்றும், திருவருள் வளமைச் சித்தன் என்றும் புகழவிளங்க வேண்டும்.

அப்போதும் அம்மட்டில், திருத்தியுற்று, அச்சிறப்பைத் தமதாகக் கொண்டு கெடாமல், திருவருட் செயலுக்குத் தான் சாட்சி மாத்திரமாய் நின்று வழிபட்டு, மறுபிறவியின்றிப்பர வெளியிற் கலக்கும் ஐக்கவீடு அடைதல் வேண்டும். அவ்வாறு திருவருட் பேறுபெற்றோரே "வல்லோர்" எனப்படுவர் என்பாராய், "தியானம் செய்து, குலவப்பெற்று, விளம்பக் கேட்டு வீடடைந்தோர் வல்லோர், எனச் சிறப்பித்தனர், எனவே, ஏனையோர் அத்தகுதியிற் குறைவுபட்டோரே என்பதும், திருப்தியின்றி முயற்சி செய்ய வேண்டும் என்பதும் ஆயிற்று.

"மனமகிழ்ச்சி யால் முயற்சி குன்று மானல்
வந்தபடி அநுபவங்கள் மாறிப் போகும்"

*நானிலைச் சதகம்.*

அகண்டபரி பூரணநிட் களமாந் தெய்வம்
அளவிறந்த நெறிதோறும் அன்பர் நாட்டம்
திகழ்ந்தபடி தோன்றுமன்றிப் புராணம் சிற்பம்
செப்பும் விதிக் கடங்காது; தென்னுல் ஊரில்
சகம்புகழ வரும்விகட கவிமுன் னுகத்
தலைஓரா யிரத்தோடு இரு தடந்தோள் காட்டி
அகந்தைமொழி கேட்டவிதம் உலகம் சொல்லும்
அபக்குவத்தோர்க் குரைத்தாலும் அறிந் திடாரே.

போ - ரை. *எங்கும் நிறைந்த வியாபகத்தன்மையுள்ள அருவத்தன்மையினதான பரம் பொருளானது இத்தனையென்று அளவிட்டுக் கூறுதற்கு அடங்காத சமயங்கள் அனைத்தினும், அந்தந்தச் சமயக் கடவுளைத் தியானிக்கும் உபாசகருடைய அந்தரங்க உறுதிப் பாவனை நிலைத்தவண்ணம் உருவங்கொண்டு முன் வருமேயல்லாமல் புராணம், சிற்பம், முதலிய நூல்கள் கூறும் அளவு வடிவு முதலிய சட்டதிட்டங் கட்குக் கட்டுப்பட்டதில்லை. இதற்குச் சான்ருக, தென்னுலி என்ற ஆந்தர நாட்டுப் பதியில் உலகம் புகழ்தற்கேதுவாகத் தோன்றியவனுன "விகடகவி" என்ற நகைமொழிப்புலவன் ஒருவன் முன்பு, அவன் பாவித்தபடி காளிமுற்பட்டு, ஆயிரம் முகமும் இரண்டு தோளுமாகக் காட்சிதந்தனள் அது. கண்ட அவன் இளமை மதியால் சொன்ன பரிகாசமொழி உலகம் சொல்லும். இருந்தாலும் பக்குவமில்லாதார் என்ன கூறினுலும் உண்மையை உணரமாட்டார் என்பதாம்.*

வி - ரை. *நிட்கள பரம் பொருளுக்கு, நூல்கள் கூறும் இலக்கணம் பொதுவிதியேயென்றும், உபாசகனது பாவனை முறையே சிறப்பென்றும் கூறித்*

தக்கதோர் உவமையும் அதிகாரியும் கூறிவிளக்குவது இக்கவியாம்.

தனக்கென்று ஒரு வடிவம், குணம் பெயர் இல்லாமல் எங்கும் நிறைந்துள்ள சுத்தப்பிரமமான பரம்பொருள், பலவிதசாத்திர சரித்திரங்களில் பற்றமைந்து வழிபாடு செய்யும் அன்பர்களது பாவனைப்படி திருவுருக்கொண்டு, பெயர், வடிவந்தாங்கி, முற்பட்டு விளங்கி அருள் செய்யும் வல்லபத்தை, தனது திருவருட்சத்தியால் பெற்றுள்ளதென்பார், "அன்பர் நாட்டம் திகழ்ந்தபடி தோற்றும்" என்றார்.

அங்ஙனமாயின் புராண சிற்ப நூல்களில், பெயர் வடிவங்கள், வகுக்கப்பட்டுள்ளமை பயனற்றதோ எனில் அங்ஙனமன்று அவைபொது விலக்கணம் ஆம். அவ்வாறின்றி உபாசகர் தாம் சிறப்பாகத் தமக்கேற்றபடி தியானித்தாலும் அப்பரம் பொருள் அவ்வாறும் விளங்குதற்குக் கடமைப் பட்டதே என்பதை விளக்கும் பொருட்டு.

"புராணம் சிற்பம் செப்பும் விதிக் கடங்காது"

என்றார். அன்றியும் கீழ்க்கண்ட ஒரு எடுத்துக் காட்டுவரலாற்றையும் கூறுவது காண்க.

ஆந்தர நாட்டுத் தென்னலி என்னும் பதியில் அந்தணச்சிறுவன் ராமனென்ற பெயரினன் ஒரு பெரியார் மூலம் காளியின் மந்திர உபதேசம் பெற்றுத் தியானம் செபம் இயற்றலாயினன். தேவியின் திருவுருவத்தை ஆயிரமுகமும் அதற் கேற்ப இரண்டாயிரம் கைகளுமாகக் கருதாமல் இரண்டு தோள் உடையதாய்ப் பாவித்தான் எல்லாமான பரம்பொருள், புராணசிற்ப முறைப்படிதோன்றாமல்

அவன் பாவனைப் படியே விளங்கியது கண்ட சிறுவன் வணங்கி, வேண்டும் வரங்களைப் பெறவிரும்பாமல் நகையோடு, அம்மையை வினவினன், தேவி மனம் வருந்தி என்னிடம் நகைமொழிகூறிய படியால் "விகடகவி" ஆக எனச்சபித்தனள். ஆயின் அது பயனற்றதாயமையாமல் அரசர் கேட்டு வியக்கும் படியிருக்குமாறு செய்க என்றான் அவ்வாறுகுகஎன்று கூறிமறைந்தனள் என்பது வரலாறு. அதனல் உலகம்புகழ விளங்கினன்.

அவன் கேட்டநகைமொழியாவது "ஒருதலையுள்ள எங்களுக்கு சளிபிடித்தால் பெரிய சங்கடமாகுமே. உனது இத்தனை முகத்துக்கும் அந்நிலை ஏற்பட்டால் இருகரங்களால் என் செய்வாய்" என்பதாம் உபாசனை நலத்தால் பிழையும் குணமாய் நலம் உதவியது என்க.

ஆயிரமுகமும் இரண்டு தோளும் காளிக்கு எந்தப்புராணமும் சிற்பமும் கூற வில்லை. அப்படி அவன் கண்டது அவன்பாவனையும், அதன் முதிர்வும் ஆம் என்பதை விளக்கவே "தலை ஓராயிரத்தோடு இருதடந்தோள் காட்டி"

'அகந்தை மொழி கேட்டவிதம் சொல்லும்'

என்றார், பக்குவமில்லாதார் இதனைக்கைக் கொள்ளார் என்பதை விளக்க,

"அபக்குவத்தோர்க்கு உரைத்தாலும் அறிந்திடார்"

என்று எதிர்மறை முகத்தால் ஓதினர். ஓதவே, ஆகமபுராண சிற்பங்களில் வரையறுக்கப்பட்ட தெய்வவடிவ நாமம் உருவம் ஆதியன வீணல்ல. பொதுவாக உபாசகர் மனத்தில் பற்றுவதற்கு ஏற்ற

படி இலக்கணமாக ஆதிகுருமார்கள் உருவகப்படுத்தப் பட்ட இலக்கணக் குறிகளாம். அவ்வாறு காட்சிகாண் பது, முன்னிலைக்குறி நினைப்பது இலக்கியக்குறி.

"ஒருநாமம் ஒருருவம் ஒன்று மில்லாற்கு"
ஆயிரம் திருநாமம் கூறி" என்பதும்

"பேர் ஆயிரம்பரவி" என்பதும், இதனைவலியுறுத் தும். நீர்நிலைக் கிணறுகளை சிலவிடத்து வட்டமாயும் சிலவிடத்து நாற்சதுரமாயும் அமைப்பதைக் காண் கிறோம். அது போலவுள்ளதுபரம் பொருள்.

சகளவுபா சனைஆண்டான் தனது, வேட்கைத்
தையலரு கடுத்தோரும் சாகச் செய்தான்
அகளநிரா மயஞான நிட்டைத் தாயு
மானவனை ஒருவனெடுத்து அழலிற் சுட்டான்
குகனடிமை யாம்அருண கிரிஅன் றந்தக்
கோபுரத்திற் பூவருதற் குறித்தேத் தாமற்
சுகமதிற்புக் கேகிஉட லிழந்தான் கண்டீர்
தொண்டு செய்யும் நன்னெறியைத் துறக்
[கொண்ணுதே

போ - ரை. உருவபாவனையால் சித்தி கைகூட லும், அருவ பாவனை பொதுவாயமைதலும், ஊழ் வினை நேரினும் சகுணவழிபாடு ஊறுகளை நீக்கி அருளும் விவரமும், தியானயோகத்தின் அவசியமும் இக்கவி ஓதிற்று. உருவநாட்டத்திற் பற்றுடையவனும், கண்டபாவனையால் காளியை உபாசித்த வசைகவி ஆண்டான் என்பவன், தனக்குரிய ஆசைநாயகியான ஒருத்தியை, அவனில்லாத சமயம் காமநோக்குடன்

நெருங்கிய சிலரை, அப்போதே இறக்கச் செய்தான். தனது சிறு தவ உபாசனைச்சித்தி பயன் தந்தது. அருவநாட்டத்தில் பற்றமைந்து தெய்வநாட்டத்தில் ஒருமித்து தேகத்தை மறந்த ஞான அநுபவமுடைய தாயுமானசுவாமிகளை, அவரது நிட்டையின் பெருமையறியாதான் ஒருவன், உயிர்நீங்கிய உடலென்று கருதித் தீயிலிட்டனன். முருகக்கடவுள் உபாசகரான அருணகிரிநாத சுவாமிகள், திருவருணைக்கோபுரத்தில் உள்ள பெருமானிடம் தேவலோகப் பாரிசாதமலரைக் கேட்டுப்பெறுமல், வேறு ஒரு கிளியின் உடலிற் புகுந்து, விண்ணுலகம் சென்று, தனது இயல்பான மனித உடலை ஊழ்காரணமாகப் பகைவனால் எரிக்கப்பட்டு இழந்தார். ஆகவே, மனம், வாக்கு, காயம் என்ற மூவகையால் தெய்வவழிபாடுசெய்வதாகிய நன்னெறியை எவ்வாற்றானும் நீக்கக்கூடாது என்பபதாம்.

வி-ரை. உபாசனை வழியிற் புகுந்து வழிபாடு செபதவம் புரியும் உபாசகர்கட்கு, சகளம், நிட்களம், என்பவற்றுள் எது சிறந்தது என்று எழும் ஐயத்தை, உபமானவரலாற்று மூலம்விளக்க இக்கவி நின்றது. உபமானம்-எடுத்துக்காட்டு.

1. வசைகவியாண்டான், பாண்டிநாட்டு ஓட்டப்பிடாரப்பதியில், வைணவ வேதியச் சிறுவனாகத் தோன்றியவன். ஆண்டானென்னும் பேருடைய அவன், தந்தையின் விருப்பப்படி பள்ளியிற்பயிலச் சோம்பிக், கள்ளத்தால் மறைவதாயினன். ஓர்நாள் முன்னையதொடர்புக்கேற்ப, ஒருபெரியார் காளி மந்திரத்தை உபதேசித்து, விடாது செபித்தால் நலம்பெறுவாயென்றார். பள்ளிமாணவர்க்குப்பயந்து, அவ்வூர்க்காளி கோயிலுட் சென்று, மூர்த்தியின் பின்புறமிருந்து, செபிக்கலானான், அக்கால் தவம்

கூடியது, தேவி காட்சி வழங்கினாள், உனக்கு வசைவேண்டுமா, இசைவேண்டுமா என்றாள். அவ்விருசொற்களின் பொருளை யறியான், வசையே தருகஎன்றலும், அதற்கு இசைவாக அங்கு உதிர்ந்து கிடந்த வேம்பின் ஈர்க்குகொண்டு, அவன்நாவில் ஓர் அக்கரம் எழுதினாள். இனி நீ கூறியபடியே எதுவும் நடக்குமென்றும் கூறி மறைந்தாள். பாடும்வாக்கு எழுந்தது, அதனால் பலதீச்செயல் நிகழ்ந்தன. கருவ முற்றான். எனினும், பலபழிபாவங்கள் நேர்ந்தமைக்கு காரணம் தான் என்றறிந்தான், அதனைத் தீர்க்கஎண்ணிச் சேதுயாத்திரைபோக எண்ணினான்.

குலமனைவாழ்க்கையின்றி, ஆசைமனையாக ஒருத்தியை வகித்திருந்தான் ஆதலின், அவளை உடனழைத்துச்செல்ல விரும்பவில்லை, தனியேவிட்டுப் போகமனமுமில்லை. ஒருபாட்டு, பாதியாகக்கூறினான்.

சேதுக்குப் போய்நான் திரும்பும் அளவும் இந்த
மாதுக்குக் காவல் வயிரவனும் மாடனுமே.

என்றஈரடிப்பாடல் கூறிச்சென்றான், அதன் பயனாகப், பல ஆடவர் அவளை விரும்பிவந்து, இரத்தங்கக்கி இறந்தனர் என்க. ஆகவே தெய்வ உருவபாவனை சிறந்தது.

2. தாயுமானசுவாமிகள், சோழநாட்டு வேளாளராய்ப்பிறந்து, திரிசிரபுரத்தில், அரசனிடம் கணக்கு வேலைபார்த்தனர். மௌனகுருதேவரிடம் உபதேசம் பெற்றனர். உலகப்பற்றற்ற மனமுடனிருந்தனர். அக்கால், அம்மன்னன் இறந்தான். அவன்புதல்வன் சிறுவன். அவன் மனைவி அரசியானாள். பருவமாதானபடியால், இவரது நல்லொழுக்கம் தெரிந்து, அவரிடம் தனித்துத்தன்னோடு இணங்கிவாழுமாறு தெரிவித்தாள். அதனாற் சபலமுறாமலும், மறுத்துக்

கூறுமலும் சிறிதுபொறு என்றோதி வெளிவந்து, அன்றிரவே ஊரைவிட்டு வெளியேறினர்.

அக்கால், பாண்டிநாட்டின் சார்பான ஒரு பகுதியின் வனமொன்றில் நிட்டையில் ஒடுங்கியிருந் தனர். அதனையறிந்தசிலர், உயிரற்ற உடலெனத் தீர்மானித்து, அந்நகரச்சிற்றரசனிடம் கூறினர். அதன் உண்மையறியாமல், அரசன், அவ்வுடலைத் தீயிலிடச் செய்தான் பாதியுடல் வெந்தநிலையில் உடல் உணர்வுற்றார். இனிப்பயனில்லை யெனவுணர்ந் தார். உடனேபரவெளியில் உயிரை, யோகவலிமை யால் செலுத்தினர், என்பது வரலாறு. அருவ பாவனை உடலைக்காக்கமுன் வரவில்லை.

இந்த இருவரலாற்றில், முந்திய ஆண்டான், சகள (உருவ) பாவனை வலிமையால், தனது ஆசை மனைவியிடத்து, காமவேட்கையால் வந்தவர்களையும் இறக்கச்செய்தான், நிட்கள (அருவ) பாவனை நிட்டைச்சீரியரான தாயுமானுர் தனது உடலையே வேறு ஒருவன் தீயிலிட்டபோதும் காக்கப்படவில்லை, என்பதை அறிவுறுத்தி, ஆரம்பஉபாசகனுக்கு உருவ பாவனையை உறுதிப்படுத்தும்பொருட்டு, "அடுத் தோரும் சாகச்செய்தான்" என்றும் "ஒருவன் எடுத்து அழலிற் சுட்டான்" என்றும் கூறினர்.

3. அது அவ்வாறுயின், சகளஉபாசனையினரான அருணகிரிநாதசுவாமிகள், உடல், தீயிலிடப்பட்டது ஏன்எனில், அவரது உடல்தீயில் எரிக்கப்பட வேண்டியநியதியிருந்தது ஆயினும். முருகன் உருவ வழிபாட்டினுல், மனித உடலைவிட்டுப் பிரிந்து கிளியுடலில் புகும்படி செய்து, பின் அந்தஉடலை எரியிடச்செய்து உயிரைக்காத்தது என்பதை விளக்க "சுகமதில்புக்கு ஏகி, உடல் இழந்தான்" என்ருர். சம்பந்தாண்டான் கூறியவாறு பாரிசாத

மலரை முருகப்பெருமானிடம் பெற்று அரசனுக்குத் தருவது கூடும், அம்முறையை அருணகிரிநாதர்கை விட்டார். ஆதலால், தம்உடலை அவர் இழக்க நேர்ந் தது, எனவே தெய்வத்தினிடம் முறையிட்டு. அருளைப் பெறுவதே மேலென்பதையும், தொண்டுசெய்து வழி படும் அடிமைத்திறமே உயர்வென்பதையும், எவ்வித உயர்ந்த அநுபவம் வந்தாலும் அதை விடக்கூடா தென்பதையும், விளக்கிறுராயிற்று.

ஆண்டான் உருவபாவனையால், தனது வேட்கைத் தையல் அருகு அடுத்தோரும் சாகச் செய்தான். என இழிவும்மை கூறி சகளவழிபாட்டின் உயர்வு கூறிய தன்றி, ஏனையதீச்செயலை ஒப்பினுரில்லை. அதுபோல, தாயுமானுர், உபாசனை உயர்வினராயிருந்தும் அருவ பாவனையின் ஈடுபாட்டினுல் தமது உடலையும் இழக்கநேர்ந்ததே என்று அருவநாட்டத்தின் பொது இலக்கணத்தைக் கூறத் "தாயுமானவனை ஒருவன் எடுத்து அழலிற்சுட்டான், என்றும் கூறியதன்றித்தாயு மானுரது நிலையைத் தாழ்வென்று கூறியது இல்லை, மேலும் தாயுமானுரது வரலாறு புலவர் புராணத்தில் சுவாமிகள் கூறும்போது பலவியாயங்கள் கூறியிருப் பது காண்க. சகளஉபாசனையிலிருந்து, முதிர்ந்த நிலை யில் அருவபாவனையில் மனம் ஒடுங்கினர் என்ப துண்மை. எத்தகையோர்க்கும் ஊழ் என்பதுண்டு. உடல் அதன் வயப்பட்டது அது மறையும் இயல் பினது. ஞானிகட்கு அது பற்றிய அபிமானமில்லை. பதியோடொன்றி, பசுபோத முடையவர்கள் என் பதாம்.

அருணகிரியார் சகள உபாசகராயிருந்தும், உடல் அழிவதற்குமுன் கிளியுடம்பிற் புகுத்தப்பட்டுக்காக் கப்பெற்ருர் என்பதை அறிவித்தவாருயிற்று. விரிக் கிற்பெருகும். உய்த்துணர்க

தெய்வம் ஒன்றே என்பதுசத் தியமே யாகும்
 தெளிவில்லார் பலவிதமாத் தியானித் தாலும்
ஐவகைப்பூ தமும்கடந்த அது, அவ் வாறங்(கு)
 அவிர்ந்தறிவு முதிர்ந்ததற்பின் அனைத்தும் தானும்
பொய்வழித்தீ மையில் முயல்வார் மேலாம் தெய்வம்
 போற்றினும் ஏனையர் வணங்கும் புன்மைத்தெய்வம்
செய்வலிக்காற் றுத விதம் அநுப வத்தில்
 தேரலன்றி வேறொருவர் தெரிக்கொண் ணுதே.

போ - ரை. தெய்வம் ஒன்றே யென்பது உண்மையேயாம். தெளிவு போதாத இளம் உபாசகர் பலவென்று கருதி வழிபாடுசெய்தாலும் ஐம்பூதங் கட்கும் எட்டாத் பரம் பொருளானது அவர்கள் செய்யும் வழிபாடு உபாசனைகளுக்கேற்றபடி, அவர் கள் மனவெளியிற் காட்சிதந்து நிற்கும். பின் அவர் களது ஆன்ம அறிவாகிய சிற்றறிவு, சமரச நிச்சயங் கொண்டு முதிர்ந்தபோது, முன் வேறு வேறாக எண்ணிய மூர்த்திபேதங்கள் பலவும், தானேயாகி (ஒன்றேபொருள் என்றறியும் படி) உண்மையை உணர்த்தும் என்பதாம்.

அசத்திய நெறியாகிய, கொலை புலை இம்சை, முதலிய தீயவழியில் ஈடுபட்டு நடப்போர், வேத உடன்பாடான மேலான தெய்வவழிபாடு உபாசனை செய்பவராயின், அவ்வழிபாட்டின் பயனுனது, உண்மை நெறியுடன் கருணை ஈகைமுதலிய நல்வழி யில் ஈடுபட்டு நடப்பவரது சிறுதெய்வவழி பாட்டின் பயனுக, அச்சிறு தெய்வம் ஒன்றின் வலிமைக்கு முன்னின்று பெரியதெய்வம் வெற்றியடையாது, என்ற செய்தியை, அவரவர் தம் அநுபூதி முறையில் அறிதற் பாலதாகும். அவ்வாறின்றி வேறு ஒரு

உபாசகன் இவ்வுண்மையை உணர்த்தினும் அநுபவமில்லாதார் அறிதல் அரிதாகும் என்றவாறு.

தெய்வம் ஒன்றேயென்றறிந்து அமையும் ஞானபாத இலக்கணத்தையும் பலவென்று ஓதியுழலும் கருமகாண்டத் தன்மையையும், ஒருங்குதழுவி, அவற்றிற்குரிய அதிகாரிபேதமும் அடையும் வரிசைக் கிரமும் வகுத்துக்காட்டி உபாசனை நெறி கைக்கொண்டொழுகும் பத்தர்களுக்கு ஒழுக்கமே இன்றியமையாத தென்பதைத் தெரிவிக்க இக்கவி எழுந்ததாகும்.

அகண்டமாயுள்ள பரம்பொருள் ஒன்றேயென்ற உண்மையானது, வேதங்களின் முடிவான ஞான பாதப்பகுதிகளிலும் சில உபநிடதங்களிலும் சொல்லப்படுவதாய் எல்லா நிலைகளையும் கடந்து அந்நிலை அடைந்தோர்க்கன்றி ஏனையோர்க்கு விளங்காமலும் பயனற்றும் அமையும் ஆதலால் ஆரம்ப சாதகத்துக் குரிய கருமகாண்டத்திற் பற்றுடையராய் நம்பி அநுட்டித்து படிப்படியாய்ப் பலபிறவிகள் கடந்தபின் முன்னைய ஞானஇலக்கணத்தினுக்குரிய அறிவையும் அநுபூதிகளையும் அடைவார்கள் என்பதை விளக்கும் பொருட்டு.

"தெய்வம் ஒன்றே என்பது சத்தியமே யாகும்

என்றும்.

தெளிவில்லார் பலவிதமாத்தியானிப்பார்

என்றும்.

"அது அவ்வாறு அவிர்ந்து, பின் அனைத்தும் தான்ஆம்'

என்றும் விளம்பினர்.

உயர்ந்த மருந்து ஒன்றை உண்டவனாலும் பத்திய முறை தவறின் அபாயமான தீங்கடைவதும், அற்ப மருந்தொன்றை உண்டவனுயினும், பத்தியப் பிழைவராமற் காப்பவனுல் நன்மையடைவதும், காண்பதுபோல, சிவன், விட்டுணு முதலிய வைதிக சமயக் கடவுள் உபாசகர்களானாலும் கொலைபுலை யாதிய தீங்குடையவராறல் கெட்டபயனும், காளி, கறுப்பன் போன்ற சிறு தெய்வ வழிபாட்டினராயி னும் ஒழுக்க நியமம் உடையவராறல் நற்பயனும் பெறுவார் என்பதை விளக்க, " பொய்வழி...... ஆற்ருது " என வகுத்தருளினர்.

"குருஅனுப்புங் குருஎனது வயிரவனற்
றிரும்பியதும் கோலம் காட்டும்
ஒருகளிற்று மாமுகனை நவவீரர்
கோல்வேமேன் றுரைக்கு மாண்பும்
பொருவிலநு பவம்பலவற் ருல்அடியேன்
தியாறை பூதி நூலில்
இருளினர்மேற் றெய்வ(ம்)மற்ருேர்
இளந்தெய்வத் தால்இறமேன் றியம்பி னேனே."

என்ற குருபர தத்துவக்கவி இதற்குப் போதிய சான்ரும். இந்நூல் தமது வரலாறுகளுடன் அநுபவ மும் விரவ, சுவாமிகளே கூறிய நூலாகும். (10)

"தானேதன் மூர்த்தியேன்பார் சிலர், தானல்லாச்
சகலமுமேன் பார்சிலர்,ஓர் தன்னே ரில்லாக்
கோனேயேன் பார்சிலர்,எப் பொருளும் ஆன
குருஎன்பார் சிலர்,எந்தக் கொள்கை யோரும்

தேனேர்சேந் தமிழ்ச்சுவையுண்(டு) அணிமா ஆதிச்
சித்திமிகச் செய்துமனத் திருத்தி யெய்தி
மானேர்கண் ணார்கலவிச் சுகமும் கைத்து
மறுபிறப்பில் லாதொழிந்தால் மாண்பினேரே."

போ-ரை. (மூர்த்தி உபாசனை புரியும் அன்பினர் தொகையில்) தனது மூர்த்தியாக விளங்கும்பொருள், தாமே யெனக் கூறுவர். சிலர் தானல்லாமல், தன்னாற் காணப்படுகின்ற எல்லாப்பொருளும் தமது மூர்த்தியின் வடிவென்று கூறுவர். மற்றொருசாரார், தாமும் உலகப்பொருள் யாவும், அல்லாது மேம்பட்ட அதீதப் பொருளே தம் கடவுள் என்பர். பிறர், தாமும், உலகப் பொருள்கள் பலவுமாக விரிந்துள்ள குருவடிவே தம் மூர்த்தி யென்பர். இத்தகையினர் நால்வர்களில் யாவராயினும், இனிய செந்தமிழின் சுவையுண்டவராய், எட்டுவிதச் சித்திகளையும் உலக நன்மைக்காகச் செய்து, மன அமைதிபெற்று, பெண்ணாசை நீங்கியவராய், மறுபிறவியற்றவராயமைந்தவராஞல் சிறந்த தவமுடையாராவார். எ-று.

வி-ரை. உயிர்கள், பந்தம் நீங்கி முத்தியடைதற்குரிய படிகளான, சரியை-கிரியை-யோகம்-ஞானம் என்பவற்றுள் முன் மூன்றைக் கடந்து, நான்காவதான ஞானத்தினரினும் பேதமுண்டென்பதை விளக்கி, மேல் முடிவு கூற இக்கவி எழுந்தது. என்னே?

நான்காவதான ஞானத்தில் ஞான பக்குவர், தமக்குரிய குறிக்கோளான மூர்த்தியாகத், தம் அறிவில் அத்துவிதப்பட்டு விளங்குவது, தமது ஆன்ம வடிவே யென்பர். ஞானத்தில் யோக பக்குவத்தோர், தானல்லாது தம்மாற் காணப்படுவதான ஐம்பூதமும் பிறவுமான பொருள்கள் யாவும் தமது மூர்த்தியின் திரு

வருள் ஆடல் வடிவு என்பர். ஞானத்திற் கிரியை நிலேயோர், தமக்கும், உலகிலுள்ள சரம் அசரம் ஆன பொருள்கள் அனைத்திற்கும், அப்புறப்பட்டு, எல்லா வல்லமையுடன் ஒப்புயர்வற்ற தலைமைகொண் டுள்ளது தமது மூர்த்தியென்றேதுவர். ஞானத்திற் சரியை நிலேயோர், எல்லாப் பொருள்களுமாகி நிறைந் துள்ள அகண்ட பரமான குருவடிவே தம்மூர்த்தி யென்று நிச்சயித்து அநுபவித்துப் பிறருக்கும் கூறுவர்.

இந்நான்கு பகுதியினருள் யாவராயினும், அபர ஞான விளக்கமான தமிழ்ப்புலமையுற்று, அணிமா முதலான எட்டுச் சித்திகளையும் தன்னலம் கருதாமல் உலக நன்மை கருதிச் செய்து, தான் திருவருளுக்குச் சாட்சி மாத்திரமாய் நின்று, ஐம்புலப் போக விருப் பின்றி, முத்தியுறுவாராயின், அவரே மிக மேலோ ராவார். என்பதை " தமிழ்ச்சுவை........மாண்பினோர் " என்றார். முத்தியின் அருமை நோக்கி "ஒழிந்தால்" என்று ஓதினர் என்க.

ஆலயத்துள்ள மூர்த்திகளே தமது தெய்வமென் றெண்ணும் சரியையாளரையும், தம்மாற் பூசிக்கப் படும் ஆன்மார்த்த மூர்த்தியினும் அந்தந்த மூர்த்தி புவனங்களிலும் உள்ளதெனக் கொள்ளும் கிரியை யாளரையும், தமது உடலுள் பாவிக்கப்படுகின்ற ஆருதாரங்களில் தமது மூர்த்தி உள்ளதென்றும், பிராணவாசி (மூச்சுக்காற்று) மயமாய் உள்ளதென் றும் கூறும் யோகிகளையும் விட்டு, மேற்பட்ட ஞான நிலைப் பக்குவிகட்குள் நான்கு பேதங் காட்டி, அவற் றிற்கு ஓர் எல்லையும் வகுத்து இக்கவி முடிந்தவாறு காண்க.

"ஒருவன் ஒரு மூர்த்தியினைத் தியானம் செய்தால்
உரைக்கரும்பல் வடிவெடுத்(து) உட்கனவில் தோன்றிப்
பெருமைமிகு சாக்கிரசொப் பனத்தில் வந்து
பேசலன்றிச் சாக்கிரத்திற் பிறர்வாய்ச் சொல்லா
மருவும்அச ரீரியுமாய்ப் பேசும் கேட்டு
மகிழ்ந்திறுமாந் திடவேண்டாம் வருத்துந் தோறும்
இருவிழிமுற் குலவுமட்டும் முயல வேண்டும்
இளைப்புற்றால் அநுபவமும் இழந்து போமே.

பொ - ரை. *தியானமுறையில் ஈடுபட்டு நடக்கும் பக்குவனொருவன், தனது அன்புக்குரிய திருவுருவைத் தியானம் செய்தால் (அம்மூர்த்தியானது) அவனது மனவெளிக்கனவில் பல்வடிவுடன் காட்சியுதவியும், அதன்பின் சிறந்த நனவுக்காட்சியாகத் தியானத்தில் தோன்றி அருளுரை வழங்கும். அல்லாமலும், உடலின் தோற்றமுடனுள்ளபோது பிறர் வாய் மொழியாகவும் பேசும். வானத்திருந்து வரும் ஒலி (அசரீரி) வழிகூறும் இவ்வித அநுபவம் கைவந்தாலும் அவ்வுருவங்களைக் கண்டும், அவ்வுரைகளைக் கேட்டும் மகிழ்ந்து செருக்கடைதல் கூடாது. கண்முன் காட்சிதர வேண்டுமென்று அழைக்கும் போதெல்லாம் தெரிசனந்தரும் வரை தியான, செப, வழிபாடுகளை முழு ஊக்கத்துடன் செய்தல் வேண்டும் அவ்வாறின்றி, சோம்பலோ மகிழ்ச்சியோ ஏற்பட்டு அவற்றைவிட்டால். வந்த அநுபவம் யாவும் படிப்படியாய்க் குறைந்து விடும் எ - று.*

வி - ரை. *மூர்த்தியுபாசனை புரிவோர்க்கு இடையில் நேரும் தூலசூக்குமக்காட்சி, கேள்வியநுபவ விவரங்களும். அவற்றில் மகிழாமல் முயலவேண்டும் அளவையும் அது இல்லாதபோது எய்தும் நட்டமும் இக்கவி கூறியதாம்.*

சரியைகிரியையாகிய தொண்டும், ஆராதனையும் ஆயபகுதிகள் அங்கமாயமைய மூன்ருவதான தியா னயோக முயற்சியில் ஈடுபடும் பக்குவர் தொடக்கத் திலிருந்து படிப்படியாய் அடைதற்குரிய முறைகளை வரிசைபடக்கூறி, மேல் ஒழுக்க நியதிகளை இதனிடத் துக்கூறிஞராயிற்று.

தியான ஆரம்பநாளில் பலவடிவில் மூர்த்தி, கனவுக்காட்சியில் தோற்றலும் பின் தியானம் நிலைத்த போது சாக்கிரக்கனவில் வெளிப்படுவதும் மற்ருரது வாய்மொழிகளிற் கலந்து பேசுதலும், உண்டாகும். அவ்வநுபவங்கள் அமையக் கண்ட உபாசகர், திருத் தியில் முழுகிக் கெடாமல், எந்தநேரத்தில், எவ்விடத் தில், கருதி அழைத்தாலும், உடனே தன்கண்முன் பாகத் தமது உபாசனைக்கடவுள் காட்சிதரும்வரை முயற்சி தளராமற்கொள்ள வேண்டும் என்றும் "இளைப்புற்ருல் அநுபவமும் இழந்து போம்" என்றும் ஓதினர்,

இக்கருத்தை மேலும் விளக்கி கௌமாரமுறை யென்ற நூலில் இவர் "மனமகிழ்ச்சியால் முயற்சி குன்றுமாஞல் வந்தபடி யநு பவங்கள் மாறிப்போகும்" என்பது போற்பல கூறியுள்ளனர். 12

சாக்கிரத்திற் கண்டகுரு மூர்த்தி வார்த்தை
தன்னைநம்பி ஒருமுனிவன் தமிழ்த்தேன் பாண்டி
காக்கவல்லான் முன்புபட்ட சளம்கேட் டுள்ளார்
கனவாதி யவற்றைநண்ணிக் களிக்கப் போமோ
தேக்குதிருத் தியில்நலம் சந் தேகம் ஆகும்,
திருவருட்சோ தனையைவெல்லும் திறத்தோர் உண்டோ
காக்கசையில் நாடசையும் பேறற் ருரும்
நலிவதற்காம் விதம் அறிந்து நடத்தும் அன்றே.

போ - ரை. தூலக்கண்முன் நனவில் தன்ஞற் றெரிசிக்கப் பெற்ற பரமசிவ வடிவமான சற்குரு நாதரது திருவாக்கால் ஓதிய உண்மைமொழியை உறுதியெனக்கொண்டு நம்பியமகிழ்விஞல், ஒப்பற்ற தவப்பெரியாராகிய திருவாதவூரடிகள் தமிழ்ச்சிறப் புவாய்ந்த பாண்டிநாட்டை ஆண்ட அரிமர்த்தன பாண்டியன் முன்பு அநுபவித்த இடர்ப்பாட்டை வரலாற்றின் மூலம் உணர்ந்த அன்பர்கள், உபாசனை யில் நேரும் கனவு, வாய்ச்சொல், அசரீரி, முதலிய வற்றில் நேரும் அநுபவங்களை முடிவாக விரும்பி மகிழ்வடையக் கூடுமா? (கூடாதென்றபடி)

முயற்சியிற் செல்லவிடாமல் சோம்பல் விளைத் துத்தடைபடுத்துகின்ற திருத்தியைவிட, தெய்வத் திருவருள் நமக்குக்கைவருமோ, வராதோ! என்னும் ஐயமே நன்மை தருவதாகும், திருவருட் செயலால் வரும் பத்திசோதனைச் செயல்களை, தமது புத்தி சாதுரியத்தால் வெல்லத்தக்கவர் யாண்டுமில்லை, தன் நாக்கொண்டு ஒருசொல்ஓதிஞல், இவ்வுலகத்துள்ளார் யாரும் ஏற்று நடக்கத்தக்க ஆண்மையுடைய அரசர் ஆதியோரையும் கூட, மனம் வருந்தியுழல் வதற்கான தன்மையை அறிந்து, சில செயல்களை நடத்தும் திறமுடையது திருவருள் எ - று.

வி - ரை. தெய்வ உபாசனை நெறியில் அமைந் துள்ளமேலோர்கள் தமதுமனவெளியிற் காணும் அநுபவங்கள் பற்றி மகிழ்வுற்று, மேற்கொண்டு தவ முயற்சியில் தளராதவாறு, தக்கதொரு எடுத்துக் காட்டின் மூலம் தெளிவித்து, தெய்வத்தின் பேராற் றலைத் தெரிவிக்க, இக்கவி எழுந்ததென்க.

திருவாதவூரில் தோன்றிக் கல்விகேள்விகளிற் சிறந்து விளங்கிய மாணிக்கவாசகரை, அரசன், தனது

முதன்மையான அமைச்ச பதவியில் வைத்து, அரசு செய்தகாலத்தில் அவரை குதிரைகள் வாங்கி வருமாறு பெரும்பொருளுடன் துணையாகச் சிலரைச் சேர்த் தனுப்பினன்.

''மந்திரித் தொழில் செய் போதும் மனத்திடை வயிர [வேற்கை
இந்திரன் வாழ்வும் தாழ்வே யெனக்கரு(து)] இறுமாப்(பு) [ஒன்றும்
சந்திரன் முடித்த வேணித் தலைவனே குருவாத் தன்முன்
வந்தினி தருள வேண்டும் வாஞ்சையும் வளர்த்துற் றனே''

என்றவாறு, பதவியிலிருந்தபோதும், உள்ளூர அருளை நாடியிருந்தார் சென்ற இடைவழியில் திருப் பெருந்துறைப் பதியினிடத்து, குருந்தமரத்தினடியில், இறைவன் திருவருள் சற்குருவடிவாகிக் காட்சிதந்த தைக் கண்டனர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கிமெய் மறந்து நின்றனர்.

''பொற்பணம் புரவிவேட்கை புரவலன் ஆணை ஆதி
அற்பமும் மதியாத''

நிலையிலிருந்தனர் அடிகள்

குருநாதர் இவரது முன்னைய தவச்சிறப்பறிந்து ஞான உபதேசம் செய்து, ஆண்டருளினர் உடன் திருவுருமறைத்தனர். வந்தருளியவர் பரமசிவன் என்பதறிந்து, அவ்விடத்தை, மையமாகக்கொண்டு, கொண்டுவந்த பொருளால் இறைவனுக்கு ஆலயம் செய்தனர் அதையறிந்த அரசன், இவரையழைப் பித்து வினவினன் குதிரைகள் ஆவணிமூலத்தன்று வருமென்பதாக இறைவன் கூறிய திருவருளாணைப் படி கூறினர். அதைநம்பி மணிவாசகர் மதுரையிலிருந்

தசமயம் இறைவன் சோதனையால் வந்தகுதிரைகள் நரிகளாயின். அதை அறிந்த அரசன் அடிகளை ஒறுத்தான், ஆதலால் உபாசகர், கனவு நிட்டைக்காட்சி, முதலியவற்றால் மனமகிழ்வடையக்கூடாது என்பதை கனவாதியவற்றை நண்ணிக் களிக்கப்போமோ என்று விளக்கினர்.

மனம் திருத்தியடைவதால் மேற்கொண்டுதவ முயற்சியில் ஈடுபடாது தடைப்படும். எப்படிச் செய்யுமோ திருவருள் என்ற சந்தேகமிருந்தால், அச்சமும் இடைவிடாத முயற்சியும், விருப்பமும், அமையும். ஆதலால் "திருத்தியில் "சந்தேகம் நலம்" என்றார்.

பொருட்பேற்றினால் உலகியலில், அரசர் முதலானோர்க்குக் குறையில்லையென்று எண்ணுவாரது கருத்தைமறுத்து "நாக்கு அசையில் நாடு அசையும் பேறு உற்றாரும் நலிவதற்கு ஆம் விதம் அறிந்து நடத்தும்" என்றார். மேலும் திருவருட் சோதனையை மீறுவோர் யாரும் இலர் என்றும் கூறினர். தெய்வசம்மதப்படி ஒருவர் சுகமடைவதும் வருந்துவது மல்லாமல் பொருளாலும் கல்வியாலும் பதவிமுதலிய வற்றாலும் அன்றென்பதை விளக்கினார். 13

தெய்வஅரு ளேநலமேன்(று) அளவி லாற்றல்
தெளிந்தபடி காண்பதற்காச் செபம் தியானம்
செய்வதற்குத் துணியில், முழு மனமே வேண்டும்
சிறிது குறைந் தாலும் அது சீர்ப டாது
மெய்வழக்கிற் போய்கலக்கும் கோடிதும் காட்டும்
வெறுத்து விடக் கூடாது விண்ணும் மண்ணும்
உய்வதற்காம் விதம்கருதும் சரதம் தோய்ந்த
உள்ளத்தார் இகழினும் அ(து) ஒவுறுதே.

போ - ரை. இவளவென்று அளவிடற் கரிய பலவித நல்வழிகளாலும் திருவருட் செல்வமே மேலானதென்று அறிந்தபடி, செபம் தியானம் புரியமனத்தில் உறுதிகொண்டால், நிறைந்தமுழு ஊக்கமானமனவலிமை வேண்டும். சிறுதளர்ச்சி யேற்பட்டாலும் சிறப்புப் பெருது. இவ்வாருக உண்மையான தவநெறியில் ஈடுபடும் போது அதற்கு மாருக விபரீதச்செயல் நிகழவும் கூடும். உண்மை பொய்யாகும். அதுசமயம் மனம்சலிப்படையக் கூடாது. ஆனல் இவ்வுலகமும் விண்ணுலகமும் துன்பமற்ற சுகவாழ்வு பெறஉண்மைத் தவம் செய்யுமேலோர், உள்ளம் வருந்தித் திருவருளை இகழ் வாராயினும் அந்தத்திருவருள் அவர்களைவிட்டு விலகாது எ - று.

வி - ரை. முழுஊக்கமுடையவரே உபாசனைக்கு உரியவரென்பதும், உண்மைக்குமாறுபட்ட கொடுஞ் செயல்கள் நேரிட்டாலும், தன்னலம்விரும்பி அருளை விழைவோர், தெய்வத்தைவெறுத்தல் கூடாது என்பதும், பொதுநலங்குறித்தோர் ஓரோர்சமயம் வெறுத்து ஓதினுரேனும் தவருகாது என்பதும் இக்கவி விளக்கிற்றென்க.

உத்தமநூலாராய்ச்சி, நல்லோர் கூட்டுறவு முதலிய பலவகையாலும் பெறும்பயன். தெய்வ நிச்சயமும், திருவருட்பேற்றின் அவாவுமேஆம் என்பதும், அவ்வளவில்விடாமல் அதற்கேற்றதவ முயற்சிகளை மனம் மொழி மெய்களால் இயற்றல் வேண்டும் என்பதும், அவ்வாறு முயல்வதில் சிலசமயம் ஊக்கமும், சில சமயம் சோம்பலும் இன்றி, நிறைமனத்துடன் முயலவேண்டுமென்பதும் விளக்க, "துணியில் முழு மனமேவேண்டு"மெனக் கூறினர். எனவே துணிதலின் அருமையும்,

அவ்வாறுதுணியாமல் பல அலுவல்களில் ஒன்றாக, சிறுபோது சிறுஅளவு செபதியானங்கள் செய்வோர் கட்கு இவ்விதி இன்று என்பதையும் இக்கவிதெளிவு படுத்திநின்றது.

உண்மைப்பத்தி செய்வோரது தவமுயற்சியின் போது, திருவருட்சோதனை காரணமாக, உண்மைக்கு மாறாயும், கொடுமையாயும், ஆகிய செயல்நிகழ்வது இயல்பு. அக்காலத்தில், பொறுமையுடன் அதைச் சகித்துக் கொள்ளல்வேண்டும் என்பதைவிளக்க "வெறுத்து—விடக்கூடாது" என்றார்.

தன்னலத்தைவிரும்பித் தவம்புரியும் நிலையின ருக்கு இவ்விதிகூறியது. விண்ணுலகமும், மண்ணு லகமும், இடர்நீங்கி இன்பமடைதற்கு உரிய அருளா டலியற்றி, பின்பு தான்முத்திசேரக் கருதுகின்ற பெரியோர், தமது அன்பின்காரணமாகத் தோன்றும் ஊடல்பற்றிச், சினந்து நிந்தைகூறினும், அதற்காக, அத்திருவருள் வடிவத்தெய்வமானது, அவர்களை விட்டு நீங்காமல், அத்துவிதமாக(வேறுபாடின்றி) ஒன்றுபட்டேநிற்கும் என்பார் இகழினும் அது ஓவுறாது" எனக்கூறினார். "இகழினும்" என்ற உம்மை யால், இகழமாட்டார் என்பதும். ஒருசமயம் இகழ்ந்தா ராயினும் அவ்விகழ்ச்சி, புகழ்ச்சியினும் பன்மடங்கு சிறப்பாகத்திருவருள் ஏற்றுக்கொள்ளும் என்பதும் ஆயிற்று. 14

இராகவன்கிட் டிணன்முதலோர் விண்டு என்றும்,
எழில்வேல்உக் கிரன்,காழிக்(கு) இறைவன் அன்னார்
குராஅணிசேய் என்றும்நுவல் வதுபோற், பல்லோர்
கூறல்முற்றும் அந்தந்தக் குறிதோட்(டு) உய்ந்தோர்;

தராதலம்உய் வதன்நிமித்தம் உதித்த வாருய்ச்
சாற்றுமட்டும் தோந்தஉபா சகன்ஆ ரேனும்
பராவுமின்:அன் னவன்தவம்வீண் போகி டாது
பரத்துவமும் அவனமைத்த படியாம்: அன்றே.

போ - ரை. இராமன், கிருட்டிணன் முதலாகச் சொல்லப்படுகின்ற அவதாரபுருடர்களை நாராயணன் என்பதாகவும், அழகியவேலாயுதமேந்திய உக்கிர குமாரபாண்டியன், திருஞானசம்பந்தர் போன்ற மேலோர்களை முருகக்கடவுள் என்பதாகவும் அன்பர்கள் சொல்வதுபோல, புராணமுறைப்படி அவ்வச் சமயத்துக்கேற்ற மூர்த்திகளை உபாசித்து மேல்நிலை ஞானபக்குவம் பெற்றுப் பதமுத்தியில் இருந்த சாரூபநிலையுற்றோர், பூவுலகத்தில் உள்ள உயிர்கள் தீவழிவிட்டுவிலகி நல்வழி சேர்ந்து உய்தற்பொருட்டு, திருவருள் இயக்கம் காரணமாகத் தோன்றியவர் களாவார்கள். என்பதாக தனது அநுபவத்தெளி வாற்கண்டு சொல்லும் வரையும் தேர்ச்சிபெற்ற உபாசகன் யாராயிருந்தாலும், அவனைப்பலரும் வணங்குங்கள் அத்தகைய மூர்த்திசாரூபம்பெற்ற உபாசனையுடையோர் அந்த மூர்த்தித்தன்மையைப் பெற்றுள்ளனர். ஆதலால் அவர்களை வணங்கு வதால் பயன் எய்தாமற்போகாது, திருவருளும் அப்பெரிய உபாசகனது கருத்துப்படியே செயல் படும் எ-று. அன்றே-அசை.

வி - ரை. புராண வரலாறுகளில் வரும்மூர்த்தி களின் உண்மையான விவரத்தை, தனது உபாசனை யின் அநுபவத்தினுல் அறிந்து சொல்லும் பக்குவியே குருஆவதற்கு உரியவன், அவன்வாய்மொழி, உலக மக்களனைவரும் ஒப்புதற்கு உரியது என்பதை இக்கவி உணர்த்திற்று என்க.

அருவத்தன்மை, உருவத்தன்மை, அருவுருவத் தன்மை, அனைத்தும் தனதாக்கொண்டு, வேற்று மைப்படாமல் உள்ளபரம்பொருள் ஒன்றே யென் பதும், உயிர்கள் அதன்வசப்பட்டவை என்பதும், அவைகளின் பக்குவநிலைக்கேற்பப், படிப்படியாய் உயர்ந்துநின்று உய்தற் பொருட்டு,* சாத்திய திசை யடைந்த பெரியோர்களாகிய குருமார்களால் அமைக் கப்பட்ட இலக்கணப்படி உபாசகர்பற்றி, வணங்கி, வாழ்த்தி, சிந்தித்து, ஈடுபாடுகொண்டபோது, அவ்விதம் முன்னிலைப்பட்டு அப்பரம்பொருள் அருளுமென்பதும், குறித்தார்.

தவிர, அவர்கள் யோகபாத நிலையிலிருந்து பதமுத்தியிலமைந்தபின், திருவருளியக்கத்தால் பூவுல கத்திற்றோன்றி, தனது மூர்த்தியென்று உலகோர் நம்பப் பலரறியக்கூறி, வணங்கிப்பயன் பெறுதற்கு ஏதுவாக அம்மூர்த்தியின் கலாமிசம் கொண்டு தான் விளங்கி, அறக்கருணையால் நல்லோரைக்காத்தும், மறக்கருணையால் பொல்லாரை ஒறுத்தும், பின் பரமுத்தியடைவர் என்பது மேலோர் துணிபு. ஆதலால், அம்முறையில் இராமன் கிருட்டிணன் ஆதிய அவதாரமூர்த்தங்கள் திருமால்என்றும், உக்கிரகுமாரர், சம்பந்தர்போன்ற மூர்த்தங்கள் முருகன்என்றும், தாட்சாயணி (தட்சகுமாரி) பார்வதி (பர்வதராசகுமாரி) தடாதகை (மலையத்து வசபாண்டியபுத்திரி) முதலிய அவதாரம் அருட்சத்தி யென்றும், மகோற்கடர் பாலசந்திரர் முதலிய மூர்த்தம் கணபதியென்றும், அல்லமர், சங்கரர் முதலியோர் சிவபிரானென்றும், காசிபரது மகன்

---

* சாத்தியதிசை—பயிற்சியில் முதிர்ந்தநிலை. சாதனம்—பயிற்சி. சாரூபமுத்தர்கள்-மூர்த்திவடிவம்பெற்று, தன்மூர்த்தி யுலகில் முத்திக்குரியவாகியபக்குவர்கள்.

சூரியன்என்றும், இன்னும் இவைபோற்கூறுவன வான மூர்த்தபேதங்கள் யாவும், அவ்வப்புவனங் களிலிருந்து தலையான மூர்த்திகள் சென்று பிறந்த தன்மை அல்ல என்பது உண்மை.

எவ்வாறெனில்? முற்பிறவிகளில் தான்விரும்பிய மூர்த்திகளைவழிபட்டு பதமுத்தியில் உள்ள சாரூபமுத் தர்கள், உலகில் மறம் ஒழிந்து, அறம்வளர்ந்து விளங்கும் பொருட்டு, அவதரித்து நடத்திய செயலேயாம் என்றஉண்மை. பலகாலம் புராணசரித முறையிற்பயின்று, பின்தியான உபாசனையில் ஈடுபட்டு நிலைத்து, உண்மையநுபூதியில் அருள் பெற்ற ஒருசிலருக்கே அமைதற்பாலதாம், அவர் தலைமைப்பரத்துடன் தொடர்புடையவராதலால், பலரும்வணங்குதல் வேண்டும் என்பதைவிளக்க "சாற்றுமட்டும் தேர்ந்த உபாசகன் ஆரேனும் பராவுமின்" எனவும், "அன்னவன்தவம் வீண்போகிடாது" எனவும், கூறினார். மேலும், பரம் பொருளானது, அத்தகைய அநுபூதியுடையாரது ஒழுங்கில் அமைந்து நின்று விளங்கும் என்பதை "பரத்துவமும் அவன் அமைத்தபடி ஆம்" என்றும்கூறினர் என்க.

இருவினைப்பட்ட உயிர்கட்கே பிறவி உளவாம் அன்றி, பதிப்பொருளான தெய்வம் பிறப்பது இல்லை. தவம் முதிர்ந்தவர்களிடம் தனது அருட்கலை ஒன்றைச் சார வைக்கும் கருணை ஒன்றே உடையது என்க. புராண முறையோர் மூர்த்திகட்குப் பெருமை கூறியும், சிறுமை கூறியும் வாதம் புரிந்து உழல்வர். 'பவுராணிக வாதனைமாறி அருட் - கவுமார நெறித் திறல்' கண்ட பெரியோருக்கு மூர்த்திகளில் பேத மின்று. தந்தையாகிய பரத்தின் செயல்களை, மைந்தர் களும் கொண்டு விளங்குபவரே சொருபசித்தர் எனப் படுவர். நெருப்போடு தொடர்புடைய மரம், இரும்பு

நெருப்பின் தன்மை யுற்றதுபோன்றும் *இது விவரம் மேலும் விரிக்கிற் பெருகும். 'கௌமார விநோதநூல்' உரையுட் காண்க.

15

''கனவினும் சிற்சிலபலிதம் ஆவ துண்டு
கண்டனஎல் லாம்நிசமாக் கருதில் துன்பம்
மனவெளிகோள் ளாதுவரும் அநுப வத்தில்
வந்தவற்றைக் கண்டமட்டில் மகிழ்தல் நன்றாம்.
தினகரகோ டிகள்அனைய தெய்வம் ஒன்றே
தியானிக்கும் பலவடிவாய்த் திகழ்ந்திட் டாலும்
தனதுநிலை யுங்குறிக்கும் நாம ரூபத்
தன்மையும்போற் பலாபலன்கள் சாற்றற் பாற்றே.

போ-ரை. உபாசகர் மனவெளிக் கனவிற் காணப் படும் சொப்பனக் காட்சிகளில், சில உண்மையாக நடப்பதுண்டு. அதுகொண்டு காண்பவையெல்லாம் பயன்தரக்கூடியதென்றே நம்பினால், மனதில் துன்பம் மிகும். ஆதலால், தனது அநுபவத்திற்கு ஒப்ப நனவில் நடைபெற்றதைக்கொண்டு, இவை மெய்யாயின. ஏனையவை நல்ல நிமித்தங்களாகும் என்று மன அமைதிகொள்ளவேண்டும்.

திருவருள் ஒளி பரப்பி நிற்கும் பொதுப்பரம் பொருள் ஒன்றே. அது உபாசிப்போர்கள் மனம் நிலைத்து, தனித்தனி தியானிக்கப்படுகிற, பலவித வடிவமாயும் தோன்றி நின்று அருள் புரியும். இது

---

* "பெம்மான் முருகன் பிறவான் இறவான்" என்றதும் "புகலியூரில் அன்று வருவோனே" என்றதும் இக்கருத்துபற்றியதேயாம். கண்ணபிரான் அவ்வப்போதும் உலக நன்மைக்காகப் பிறப்பேன் என்று கூறியதும், தன் கலையைப் பக்குவ ஆன்மா மூலம் பதியவைத்தலாகிய அருளேயாமென்றுணர்க.

உண்மையாயினும், தியானிப்பவனது சத்தியபுத்தி ஒழுக்கம், ஆதிய உயர்வுக்கும், வடிவம், மந்திரம், இவற்றின் சிறப்புக்கும் ஏற்றவாறு நற்பயனும், அவை குறைந்தவனிடத்துப் பயன் குறைந்தும், அமையு மென்றும் கொள்ளவேண்டும் எ-று.

வி-ரை. உலகில் உள்ள சாதாரண மக்கள், உணவு, குணம், நினைவு போன்ற வகையாற் காணப் பெறும் கனவுகளை ஒதுக்கி, உபாசனைக்குரிய அன்பர்கள் தியான காலத்தில் காண்கின்ற சொப்ப னங்களின் விவரங்களையும், அவற்றைக் கொள்ளும் முறையையும் முற்பாதியில் விளக்கி, அந்த உபாசனை யோர் பெறும் பயன்களின் பேதங்களைப் பிற்பாதி யிலும், இக்கவி விளக்கியதறிக.

அருவாயுள்ள பரம்பொருளைத் தனக்கேற்ற ஒரு மூர்த்தி வடிவமாகக் கொண்டு தியானிக்கின்றவர்கள், மூர்த்தி வடிவத்தை முதலிற் சொப்பனத்திலும், பின்பு மனம் ஒடுங்கிய நிட்டையிலும், காண்பது முறை. அவற்றில் முதலில் ஏற்படுகின்ற சொப்பனக் காட்சிகளிலேயே மனம் மகிழ்ச்சியுற்று, முயற்சி யிழத்தல் கூடாது. கனவைப் பொய்யென்று இகழ்ந்து ஒதுக்குவதும் பழுது. கனவில் அநுபவத்துக்கு ஒத்து வந்தது கொண்டு. மெய்யென்று களித்து, மற்ற வற்றை நல்ல சகுனமென்று அமைவது வேண்டும் என்பதை "அநுபவத்தில்........மகிழ்தல் நன்றாம்" என் றோதினார். என்னை ?

ஓர் காரியத்தைக் கருதி, மற்றொரு ஊருக்குச் செல்லத் தொடங்கிய ஒருவன், வழியிற் காணும் நற்சகுனங்களைக் கண்டு மேலும் ஊக்கமாக நடந்தால் பயன் பெறலாமன்றி, சகுனத்தையே பயனாக நம்பி இடையில் தாமதித்திருப்பானாயின், குறித்த பயனை

யடைய முடியாது. அதுபோல, கனவுகளைக்கொண்டு மகிழ்ந்து முயற்சி குன்றாமல், ஊக்கத்துடன் தவம் செய்தல் வேண்டுமென்பதாம்.

எங்கும் நிறைந்த ஒளிவடிவான பொருள் ஒன்றே. அன்பரது பாவனைப்படி காட்சியளிப்பதாயினும், ஒரேவிதப் பயன் எய்துவதில்லை. உபாசிப்பவனது ஒழுக்கம், குறிக்கோள், மந்திர, மூர்த்தி, பேதங்களுக்கு ஏற்றபடி பயன்சிறந்தும், குறைந்தும், அமைவன என்பார் "தனது நிலையும் குறிக்கும் நாம ரூபத்தன்மையும் போல் பலன் அபலன்கள் சாற்றற்பாற்று" என்றார்.

மின்சாரத்தின் ஊடுருவல் ஒன்றேயாயினும், அதையேற்றுள்ள கருவி, (பல்பு) களின் தகுதி, நிறம் இவற்றுக்கேற்ப, சிறந்தஒளி, குறைந்தஒளி, நிறபேத ஒளி ஆகியன அமைதல்போலவும், நோய்நீக்கத்துக் கான மருந்து ஒன்று, உண்பவரது உடலின் கூறுகட்கேற்ப, உணவுமுறை, உடன் சேர்க்கைமுறை (அநுபானம்) ஆதியவற்றிற்கேற்ப குணம்வேறு படுதல் போலக் கொள்க. எதற்கும், தம்மில் மேம்பட்ட பெரியோர்களை அடுத்து, நற்பயன்கட்கு ஏற்றசிறந்த மூர்த்தி, மந்திரம் ஒழுக்கங்களைக் கேட்டறிந்துகொள்ளல் முக்கியம் என்பதாயிற்று. 16

மண்முதலாம் ஐந்துவகைப் பூதங் கட்கும்
மதிகதிர்க்கும் உயிர்க்கும்அதிட் டானம் ஆகும்
எண்மயமே; தமிழ்வண்ணத் தியல்பின் பேதத்(து)
எண்ணிறந்த கடவுளராய் இலங்கும்: அந்த
வண்மைஅரன் ஆகமம்ஆ தியபன் னூல்கள்
வகுத்திடினும் தவவலியே வலியதாம், ஆறு
உண்மிளிர்மூர்த் தியும்,மனமும், கல்லும் சாணை
உருவமும் போன்(று) உரிஞ்சநிற்போர் உணரல் ஆமே.

பொ-ரை. நிலம் முதலாக ஆன்றோர்களாற் சொல்லப்பெற்ற *ஐம்பூதங்களுக்கும், சந்திர சூரியர் கட்கும், உயிர்க்கும், காரணமாயுள்ள எட்டுவித மூர்த் தமாயுள்ளபரம் பொருள்ஒன்றே. தமிழினிடத்து உள்ள வண்ண இலக்கணத்தின், தொகை, வகைப் பேதங்கள்போல, அநந்தவித தெய்வவடிவங்களாக உபாசகர்கட்கு முன்னிலைப்படும். இத்தகையசிறப்புச் செய்தி, சிவபிரான் முன்பு அருளிய ஆகமமாதிய பலநூல்கள் வகுத்துக்கூறின. இருப்பினும், அது பொதுவாகும். உபாசகனுற் செய்யப்படுகிற தவத் தின்பலமே சிறப்பாகச் செயல்படுகிற செய்தியாகும். தமது மனத்திற் கருதப்படுகிற மூர்த்தியுருவமும், கருதுகின்றமனமும், பட்டைதீட்டும் பொருட்டு, கிட்டியில் பொருத்தப்படுகிற ரத்தினக்கல்லும், சாணைக் கருவியும்போல, ஒன்றையொன்று நெருங்கி உறவுகொண்டு பயன்படுகின்றது போல, தியான நிட்டையில் நிலைத்துநிற்கும் உபாசகர் மனச்சான்ருக அறிதற்பாலது எ-று. ஏ-அசை.

வி-ரை. தெய்வத்தின் பொது இலக்கணம், பொதுச்சிறப்புஇலக்கணம், சிறப்பிலக்கணம் ஆகிய முப்பகுதியையும், எடுத்துக்காட்டு (உபமான) மூலம்விளக்கி, அதனை உணர்தற்குரிய பொது இயல், சிறப்பியல்களையும், அதிகாரியிலக்கணத்தையும் இக் கவி விளக்கியதென்க.

நிலம், நீர், காற்று. நெருப்பு. வெளி சந்திரன், சூரியன், உயிர் என்ற எண்வகைப் பொருள்கட்கு-

---

* ஐம்பூதம்-மண், நீர், நெருப்பு, காற்று, வெளி, என்பன. தொகை-சந்தம் எட்டு என்பது. வகை-அதன்கூட்டினுல் பலவாகவருவது. சுரங்கள்ஏழும், அதன்பேத அமைப்பால் இராகம்பலவாக விரிதல்போலும் என்க.

ஆதாரமான அட்டமூர்த்த வடிவமானபரம்பொருள் ஒன்றே, பலவிதத் தெய்வவடிவமாகக் காணப்படுவதாம். அது எவ்வாறெனில், தமிழ்மொழியின் வண்ண இயலில் தத்த, தாத்த, தந்த, தாந்த, தன, தான, தன்ன, தய்ய, என்னும் எட்டுச்சந்தத்தின் சார்பாகவே பலவிதக்குழிப்புப் பேதங்கள் தோன்றுவது போலாகும். என்ற தமது தமிழ்ச்சந்தப்புலமையின் ஆற்றல்மூலம் புலப்படுத்த எண்ணி "வண்ணத்தியல்பின் பேதத்து எண்ணிறந்த கடவுளராய் இலங்கும்" எனவிதந்தனர்.

அவ்விவரங்களை, வாதுளம், காரணம், காமிகம் முதலிய சிவாகமங்களும், ஏனையபல புராண உபநிடதங்களும் நன்குவிளக்குவன ஆயினும், அவை அபரஞானவிற்பத்தியாகிய பகுதியாம். இடையறுத்தியானயோக முயற்சியாகிய தவ அநுபூதியே பரஞான விளக்கமாம். என்னும் உண்மையை அந்நிலையில் நின்று அநுட்டித்தோரே அறிவர், எனவிளக்கும் பொருட்டு "விளக்கிடினும்" என்று உம்மை கொடுத்தும், "தவவலியேவலியதாம்" என்று தேற்றப்பொருளிலமைத்தும், "உரிஞ்சநிற்போர் உணரலாம்" என அதிகாரியிலக்கணம் வரையறுத்தும் கூறினர். கூறவே, அர்த்தாபத்தியால்" அப்படி நில்லாதோர் உணர்தல் அரிது என்பதாயிற்று.

தமிழ் என்பது பொது. எண்வகைச்சந்தமென்பது பொதுச்சிறப்பு. பலவகைக் குழிப்பு ஆகுமென்பது சிறப்பு இலக்கணம். ஆகமவுணர்ச்சி பொதுவியல். தவவலிசிறப்பியல். நிற்போர் அதிகாரி. என்றறிக ஏ-அசை.

ஞானஅருள் நெறிக்கடுத்த யோகத் தோரும்
நலந்திகழ்சோ திடத்தோரும் நவம்என் றேதல்,
போனவில்பன் மதத்தோரும் அவர வர்க்குப்
போந்தபடி வாதிப்பார்: போதுவை நாடில்
கானமறை நெறிஆறே: அவைக லந்தே
கழிக்கரும்அ தீதம்ஒன் றும் கவினும் கண்டீர்!
ஈனமிகும் புலைச்சமயம் இனிஒன் றுண்டா
யினும் அதுவும் அவ்விருமூன் றினது சார்பே.

போ - ரை. அநுபவ அறிவென்ற பரஞானமாகிய தெய்வீகநெறிக்கு அடுத்ததாகியயோக முறையில் ஈடுபட்டுச் சிறந்தபெரியோர்களும், நன்மைமிக்க சோதிடநூற்புலவரும் ஒன்பது பேதங்கள் என்று சொல்லும் பொது மொழிக்கிணங்க, (வேதத்தின் பொதுவிதியிருந்தாலும்) பலமதவாதிகளும், தத்தம் கொள்கைக்கு ஏற்ப, தீர்மானமாக ஒன்றை ஓதியும், பிறர்கருத்தை ஒதுக்கியும் வாதம்புரிவர். அவ்வாதத்தில்மயங்காமல் உண்மையான நெறிஎது என்று ஆராயுமிடத்து, ஏழுவித ஒலிப்பகுதியினதான நால் வேதங்களில் வரையறுத்துக் கூறப்பட்ட மேற்சமயம் ஆறேயாம். அந்த ஆறுநெறிகளின் கொள்கைகளும், ஒருதெய்வத்தின் அங்கமாக வேறுபாடின்றிக் கலந்தநிலையேயாகும். அத்துடன் நீக்குதற்கரிய சமயஅதீதமாகிய ஏழாவதுநிலை ஒன்றும் சேர்ந்து விளங்கும் என்க.

இவற்றிற்குப்புறம்பாக, இழிநிலைச்சமயம் என்று ஒன்று இனிவருங்காலத்தில் ஒருமூடகுருவினால் ஏற்படுத்தப்பட்டாலும், அந்தக்கற்பிதச்சமயமும், இந்த வைதிகசமயம் ஆறின் ஒன்றின் தொடர்புடையதாய் அமையுமன்றி, வேருதற்கு இடமில்லை கண்டீர். முன்னிலை அசை எ-று.

வி-ரை. பலவகைச் சமயவாதிகளது பேதவாத வேறுபாடுகளும், அவற்றினுக்கு ஒருபொது இலக்கணமும், அவற்றினின்றெழும் சந்தேகமும், அதற்குப் போதியவிடையும் இக்கவிகூறியதென்க.

யோகமாவது, முத்திக்குரிய படியாக, ஞானத்துக்கு அணுக்கத்தன்மையில் உள்ளது ஆதலின், "அடுத்தயோகத்தோர்" என்றும், சோதிடநூலானது வேதத்தின் அங்கமாகிக்கணிதத் தேர்ச்சியாளரின் அறிவில் உணரும்படி, காலத்தின் நுண்ணிமைச் செய்திகளை விளக்கும் தன்மையினதாதல்பற்றி, "நலந்திகழ் சோதிடத்தோர்" என்றும்கூறப்பட்டனர்.

நவம் என்ற சொல்லுக்கு ஒன்பதுஎன்னும் பொருள் கொண்டு, முந்திய யோகியர், மண், நீர், நெருப்பு, காற்று, வெளி, விந்து, நாதம், சத்தி, சிவம், என்னும் பேதங்களைக்குறிப்பர், பிந்தியசோதிடர், சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், குரு, வெள்ளி. சனி, இராகு, கேது, என்ற கோள்களைக்குறிப்பர், அதுபோல, தெய்வத்தை நிச்சயிக்கும்பகுதியிலும், பலர்தத்தம் கொள்கைக்கேற்றபடி பொதுவான வேதமுடிவுக்குப் பொருள்கூறுவர். அதுஅவரவர் நிலைக்கேற்றவேறுபாடேயாம் என்பதை "போந்தபடி வாதிப்பார்" என்றும், அவ்வாறுயின்உண்மையறிவை ஒருவன் எப்படிப்பெறுவது என்ற ஐயத்தை நீக்குதற்கு, காலஅளவுக்கு முற்பட்ட நான்மறையின் பத்திகாண்டவிதியாகிப் பரம்பொருளை அடையும் நெறி ஆறு, அவற்றின் கலப்பால் விளையும் சமரசவுண்மையாகிய அநுபவமே ஞானகாண்டத்தின் விதியான சமயஅதீதமாகும் என்பதைத் தெளிவிக்க "நெறி ஆறே, அவைகலந்தே கழிக்கரும் அதீதம் என்றும் கவினும்" என்றும் கூறினர்.

இதுவரை வழங்கப்பட்டவையன்றி, இனிப்புதிதாய் ஒருசமயம்உண்டாதல் கூடுமோ, ஆயின் அது எதனைத் துணைகொண்டு தோன்றும் என்பார்க்கு விடையாக, இந்தஆறுசமயத்தின் ஒருபகுதியைத் தழுவியேஅமையும் என்பதை, "அதுவும்இவ்இரு மூன்றினதுசார்பே" எனமுடித்தனர்.

முடிந்த நிச்சயமான சமயஅதீதநிலைக்குப் பொருளாவது, சாத்திரபுராணங்களிற்கூறப்பட்ட சரியையாதிய மூன்றுசாதனங்களும், அவற்றிற்கு இலக்கான சமயக்கடவுளும், கற்பனை என்றும், மாயை என்றும், கூறிஒதுக்கி, மேலான அருவமான பிரம்மத்திற்பற்றிநின்று, அதுதாளுதல் என ஒரு சாரார் கூறுவர் ஆதலின், அவர் வாய்மொழியை நம்பற்க! அம்மொழி அநுபவம் இல்லாதவர்களுடைய உரையாகும். அந்நிலை மூர்த்திவழிபாட்டின் முதிர்வில் அமைவதெனக் குறித்தார்.

ஆறுசமயமும் அதீதமும் ஆக ஏழுபகுதிகள் உள்ளனஎன்பதும், அவற்றின் வழிபாட்டுக்காகவே ஏழுவாரங்கள் ஏற்பட்டன என்பதும், எவ்விதச் சிறப்பு வழிபாடும் இந்த ஏழுகிழமையில் அமைதல் போல், இனிவருவனவும் இருப்பதும் ஆனசமயங்களும் ஏழுபகுதியிலேயே அமையுமென்றார். 18

காமியம்வேண் டினும்,கதிவேண் டினும்,இ ரண்டும்
கலந்துறவேண்டினும்,சிவன்,மால், கவுரி, யானை,
சாமி,எல்லோன் எனும்ஆறுதெய்வத் தொன்றைச்
சந்தேக மின்றி நண்ணத் தகும்,அம் மார்க்கம்

யாமிதனிற் சொல்வதல்ல, குரவற் றேடி
இனிதருளப் பெறவேண்டும்: இசைத்தும் உள்ளேம்
மாமிசங்கள் அரக்காதி அணுவும் ஆகா :
மந்திரமும் தந்திரமும் மனம்தான் மன்னோ.

போ - ரை. போகத்தை விரும்பினுலும், முத்தியை விரும்பினுலும், இந்த இரண்டையுங்கலந்து பெற வேண்டினுலும், பரமன், திருமால், சத்தி, முருகன், சூரியன், கணபதி, என்ற ஆறுகடவுளரில் ஏதேனும் ஒருகடவுளை தனக்குரியதென்று உறுதியாகக் கொண்டு, விரும்பிவழிபடுதல் தகுதியாகும். அந்த மூர்த்திவழிபாட்டுக்குரிய முறைகளை யான் இந்த நூலிடத்துக்கூறவில்லை, அதற்கேற்றபக்குவ ஆசிரியரை அடுத்து, அவரால் அன்புடன் உபதேசிக்கப் பெறவேண்டும். ஆனல் இவ்விவரம் வேறுசிலநூல் களில் சொல்லியுமிருக்கின்றோம். கள், மது, புலால், முதலியனசிறிதளவுங்கூடாது. மற்றுள்ள மூர்த்தி யின்மந்திரம், பூசனைமுறை தன்மனத்துக்குப் பொருந் தியவாறு வசதிக்கேற்றவாறும், கூட்டியும் குறைத்தும் செய்தற்பாலவாம். மன்னோஅசை எ-று.

வி - ரை. உயிர்கள் தெய்வத்தைவழிபட்டுப் பயன்பெறும் விவரமும், அம்முறையைக் கையாளும் விவரமும், பெற்றபின் கொள்ளும் ஒழுக்கநியமமும், இக்கவிவிளக்குவதாம்.

பதியாகிய தெய்வத்தினிடத்து, பசுவாகிய உயிர்கள் பெறுதற் குரிய பயன்கள், இச்சைக்குரிய போகமும், அது தவிர்ந்தமுத்தியும், என இருவகைப் படுவன. அவ்விரண்டினுள் ஏதேனுமொன்றைத்

தனித்தனி பெறவிரும்புவோரும், இரண்டையும் ஒருங்கேபெற விழைபவரும். இந்த இருவருள் யாவராயினும் தெய்வவடிவத்தைப்பற்றி வழிபட வேண்டும். அதாவது சிவன் முதலாகச் சொல்லப் பெற்ற அறுவகைமூர்த்திகளில் தமக்கேற்ற ஒன்றைப் பற்றுதல்வேண்டும். அப்படிக் கொள்வதில் இது பெரிது, மற்றவைசிறிது என்றுவேறுபாடு செய்தல் கூடாது. ஐயமும் கொள்ளலாகாது. திடசித்தத் துடன் உபாசித்தல் வேண்டுமென்பதை "ஆறுதெய் வத்து ஒன்றைச் சந்தேகமின்றி நண்ணத்தகும்" என்றார்.

ஆனால், அந்தந்தமூர்த்திகளின் வடிவபேதம், மந்திரவிவரம், வழிபடும்முறை, ஆதியவைஎப்படி எனவினவும் வினவைவருவித்து, விடையாக "அம்மார்க் கம் யாம் இதனில் சொல்வதல்ல" என்றார். சொல்லா விடின் எவ்வாறு தெரிவது என்று வருந்துபவனுக்கு, ஏற்ற ஆசானையடைந்து அவனால் உபதேசிக்கப்பெற வேண்டும் என்பதை, "குரவற்றேடி இனிதருளப் பெறவேண்டும்" என்றார். வேறுஆசானைத் தேடித் தெரிவதைவிட, உம்மால் அறியவிரும்பிய எமக்கு மகிழ்வு அமைவதெப்படி என்னும் வினவுக்கு, இதல்லாத*வேறுநூல்களில் அவ்வகையை ஒழுங்கு பெறக்கூறியுள்ளோம் என்பதை "இசைத்தும்உள் ளோம்" என்றும், இருப்பினும் இவற்றினுக்கு ஒரு முக்கியநியமம் கூறும்பொருட்டு "மாமிசம்,கள் அரக்கு ஆதி அணுவும்ஆகா" என்றும், பலவிதமந்திரங்களுள் உயர்ந்தமந்திரமும், உயர்ந்தநூல்களும் எவை? என்ற ஐயத்துக்கு மந்திரமும் தந்திரமும்மனந்தான்" என்றும், கூறிமுடித்தனர். எனவே, மனம் ஒருவழி நிற்கினல்

---

* வேறுநூல் – கௌமாரமுறைமையில், ஒவ்வொருமூர்த் திக்கும் உரியமந்திரம். யந்திரம். வடிவபேதம். ஆதியன கூறுகின்றதைக்குறித்ததாம்.

லது, எந்தமந்திரமும், எந்தநூலும் பயன்படுவன அல்ல என்பதை விளக்கிஞராயிற்று.

19

அக்கரத்தால் சக்கரத்தால் கும்பந் தன்ஞல்
ஆலயத்தால் ஆராதித் (து) அனைத்தும் தாண்டும்
பக்குவத்தும் பாவனையை விடக்கூ டாது;
பலநூலும், இனிப்பிறக்கும் பாவத் தோரும்
முக்கியமா தல்லஎன்று விளையாட் டாக
மொழிவதுண்டு; நம்பிவிட்டால் மோசம்; சொன்னேன்
திக்கோருங்கும் இருந்ததலத் (து) உணர வல்ல
சிவயோகத் தோர்களுக்கும் தியானம் உண்டே.

போ - ரை. மூர்த்திக்குரிய மூலமந்திர எழுத்துக்களை நினைப்பதாலும், மேற்படி மந்திர எழுத்துக்களை அடைப்பதற்கான கோணவகையுடைய சக்கரத்தைப் பாவிப்பதாலும், தூய்மையும் மணமுமிக்கநன்னீர் நிறைத்த கும்பபாவனையாலும், ஆலயத்திலமைக்கப்பட்டுள்ள மூர்த்தித்தியானத்தாலும், வழிபாடுமுதலியனசெய்து அந்நிலைமுதிர்ந்து தற்பதநிலைகடந்த அருவஅநுபவம் நேர்தற்கானமேல் நிலையினும், உபாசகன் தான்கொண்ட தியானபாவனையை விடுதல்கூடாது. (அதுதானே நழுவுதல் வேண்டும்) நிட்களமான (அருவ) விருப்புடையோரால் இயற்றப்பட்ட நூல்களும், பலபிறவியெடுத்தற்குரிய பாவமுடையவரும் (பாவஞயோகமாகிய இம்முறை) சிறந்ததன்றென்று சாதாரணமாகச் சொல்லுவர். அதைநம்பி வடிவபாவனையை நழுவவிடலாகாது. நம்பிஞல் விபத்து நேரக்கூடும். எந்தத்திசையிலுள்ள செய்திகளையும், தாம் இருந்த இடத்திருந்தே கண்டறியத்தக்க விரிந்தஞானிகளாவார்களுக்கும்கூட, அவர்கட்கேற்ற தியானபாவனையுண்டு. எ-று. ஏ-அசை.

வி-ரை. உலகியல் நெறிவிடுத்துத் தவநெறியில் புகுவோர், ஆரம்பகாலத்தில் சரியைகிரியைகளை அநுட்டித்த பின்தொடர்பில், யோகநிலையின் தெளிவாகிய தியானமுறையிற் பழகுவதில், மந்திர எழுத்தை எண்ணுவதுமுதல், ஆலயமூர்த்திவடிவபாவனைவரை செய்து, மூர்த்தியின், சீவதிசைப்பாவனை, குருவடிவபாவனை, எல்லா மாயுள்ள பெருவடிவபாவனை, அருவபாவனை, யநுபவசித்தி, அமையப் பெறும் பக்குவனுகவிருந்தாலும், தியானபாவனை முதிர்ச்சியில் "நித்திரையிற் கைப் பொருளும் நீண்டமரத்தின் கனியும் போல, தானே நழுவப்பெற்ருலன்றி, தனது எண்ணத்தால், வடிவத்தியானயாவனையைக் கைவிடுதல்கூடாது என்பதை "பக்குவத்தும்பாவனையை விடக் கூடாது" என்றும், பாவனையின்றியிருத்தலே சிறந்த நெறி யென்று பலநூல்களும், பெரியோர்களும் கூறுவது எவ்வாறெனில்,

முடிந்தநிலை அதுஎன்பது பற்றி, படிக்கிரமமாகிய தியானத்தை அவமதிப்பாகக் கூறுவதுண்டு. தியானமான சாதனமின்றிப் பேச்சளவில் இறுமாந்து, பல பிறவிக்கு ஆளாவோரும், அவ்வாறுபேசுவர். அவற்றை நம்பித்தியானத்தைக் கைவிட்டால், போகமும், முத்தியுமின்றி உழலநேரும் என்பார், "நம்பிவிட்டால் மோசம்" என்றும், பேரறிவு மயமாய் யாவுமுணரும் ஞானவான்களும், தேகவுணர்ச்சி நேரும் சமயம் மூர்த்திவடிவத் தியானநெறியைக் கொண்டே முயல்வர் என்பார் "சிவயோகத் தோர்களுக்கும் தியானம்உண்டு" என்ருர்.

கூறவே, தேகத்தோற்றம், உலகத்தோற்றம், முதலிய மாயாசம்பந்தமுடையவராவோர், தியானத்தைவிட்டு உய்வது எவ்வாறு என்ருராயிற்று. 20

எட்டுவகைச் சித்தியும்போய் யான மாயை,
　　எனச்சொல்வார், அகண்டமயம் யானே என்பார்:
திட்டனைஓர் புலியேனும் அரசன் ஏவும்
　　சேவகனு யினும்எதிர்த்தால் திடுக்கம் கொள்வார்
சுட்டகனற் போல்மிடியும் நோயும் வந்தால்
　　சொல்வானேன், எந்தவிதத் துயருற் றேனும்
தொட்டொருமூர்த் தியின்வடிவைத் தியானம் செய்து
　　சுகமடைந்து தனிவீட்டில் தோய்தல் நன்றே.

போ - ரை. அட்டமாசித்திகளும், இன்மைப் பொருளான மாயையின் செயலென்றுகூறுவர்: எங்கும் நிறைந்த பரம்பொருளானது என்னைத்தவிர வேறின்று என்றோதுவர். எதிர்பாராவிதமாக புலிமுதலிய தீயவிலங்குகளாவது, அரசனால் ஏவப் பட்ட தூதனாவது, தமக்கெதிரில் முன்வருமானால் மனம்குலைந்துவருந்துவர்: (இதுஇவ்வாறாக) வருத்தக் கூடியவறுமையும், உடல்நோயும் வருமானால் அதனால்வரும் வாதனை இவளவென்று சொல் வதாற்பயன் இல்லை (அளவிலடங்காது) ஆதலால் எவ்விதமுயற்சி கொண்டாவது தமது அன்புக்குரிய மூர்த்திவடிவமொன்றை மனத்தில் நிலைக்கத்தியானம் செய்து, ஆநந்த அநுபவத்தில் அமைந்து, பின் ஒப்பற்ற பரமுத்தியில் வேறுபாடுஇன்றி அமைவதே சிறப்பாகும் எ-று.

வி - ரை. உலகப்பொருள் யாவும் பொய்யான மாயை. எங்கும்நிறைந்த பிரமமான பரம்பொருள் ஒன்றே உண்மை. அதுவே நான், என்று அநுபவ மின்றி வாயளவிற் பேசுவோரைக் குறித்து, பொய் யான சிலவற்றில் அஞ்சுமவர்கூற்றை ஒவ்வாமல், தெய்வவடிவ சிந்தனையின் உயர்வைக் கூறிவிளக்க இக்கவி யெழுந்ததென்க.

தியானயோக மார்க்கத்தில் ஈடுபட்டு முயன்றுள்ள உத்தமரது மனம், ஊக்கம் குறைந்து சோர்வடையும்படி அவர்களால் வரும்காலத்தில் உலக நன்மையின் பொருட்டுப்பெற விரும்புகின்ற அணிமா, மகிமா, கிரிமா, லகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம், என்னும் எண்வகைத் தெய்வச் செயலையும் ஒருசாரார் மாயாமயமான வீண்செயலென்று கூறுவர். தம்மை அகண்டப் பொருளான பிரமம் என்று சொல்லுவர். அந்தநேரத்தில் அரச சேவகரோ, புலிமுதலிய மிருகங்களோ, தம்மெதிர் சினந்து எதிர்ப்பட்டால் முன்பேசிய வாய்முழக்கம் இன்றி, நடுங்கிப்பதைப்பர். இவைமாயையின் தோற்றமென்று வாளாஇருக்கமாட்டார்.

மேலும், ஊண் உடையின்றியவறுமையோ, உடலில் வன்மையான நோய்களோ நேர்ந்தபோது, இது பிரமமான எனக்கில்லையென்று அசைவற்று இராமல் படும்பாடு, சொல்லமுடியாத அளவில் வருந்துவர், ஆதலின், வாயளவிற் கற்றுப்பேசித்திரியும் போலிகளது போதனையில் மயங்கற்க! என்பார் "சோல்வான்ஏன்" என்றும், எவ்விதமான துன்பமடைந்தாவதுமுயன்று ஒருசகள மூர்த்தியை மனதில் நிலைக்கத்தியானமியற்றி, அம்முயற்சியில் ஆனந்தாநுபவமும், முத்திப்பேறும், அடைவதே உய்ர்வென்று உறுதிகூறுவார் "சுகமடைந்து.......தோய்தல் நன்று" என்றும் குறித்தனர்.

* சாதகதிசையில் வினைப்பீடிதத்தாலும், திருவருட்சோதனையாலும், எவ்வளவுதுன்பம் நேரினும், சாத்தியதிசையில் ஒருநொடி நேரஅளவில்

* சாதகதிசை. பயிற்சிக்காலம், சாத்தியதிசை. தேர்ச்சியுற்ற அநுபவநிலை.

எய்தும் பேரின்பத்துக்கு அத்துன்பம் இணையாகாது என்பதாயிற்று.

21

பலகலையின் மந்திரமும் பலிப்ப தெண்ணிப்,
பார்த்து,வா யிகமெனச்சொல் பதமும் தாண்டி,க்
கலகமிடும் சமயவிகற் பமும்தீர்ந்(து), ஆனை
கண்டகுரு டரைத்தேற்றும் கவிதை பாடும்
புலவருக்கே மூர்த்திஉபா சனைச்சீர் ஆகும் :
புல்லறிஞர்க்(க்) எதுசெய்யப் புழுத்துக் கோட்டும்
மலமுதற்பார்க் குந்தமது கண்ணிற் றெய்வ
வடிவுகண்டால் மூர்த்திபங்கம் வருமென் பாரே.

போ - ரை. பலமொழிகளில் அமைந்துள்ள மந்திரங்களனைத்தும், செபிப்பவரது எண்ணப்படி பலிதமடையும் செய்தியைக் கருத்தில் ஆராய்ந்து, கண்ணுரக்கண்டு, அம்மட்டில் நின்றுவிடாமல் அதனிலும் மேலான தியானநெறிபற்றி, மந்திரத்தை வாயாற்செபித்தலாகிய நிலையையும்கடந்து, தமது நெறியே மேலென்று சண்டையிடுகின்ற சமயபேதக் கொள்கையும் நழுவி, ஆனையின் வடிவம் இதுவே யென்று ஒவ்வொரு உறுப்பைத்தனித்தனி கண்ட மட்டில் கூறிவாதிடும் குருடர்கள் ஆறுபேரையும் தெளிவுபெற (ஒவ்வொரு உறுப்பும் யானையினுடையது. அவ்வளவுங் கொண்டஒன்றே யானை யென்று விளக்கும்) சமரச நிச்சயமுடைய அநுபூதிக் கருத்துகளைக் கவியாகக் கருணையால், உலகநன்மை கருதிப்பாடவல்ல அறிஞர்களானவர்கட்கே மூர்த்தி வடிவஉபாசனையின் சிறப்பு அமைவதாகும்.

அப்படியின்றி உருவமுற்றும்மாயை என்று கூறுகின்ற சிற்றறிவினர்க்கு உபாசனைச்சிறப்பு என்ன பயன் தருவதாகும்? இல்லையென்றபடி. மேலும்

ஒருசாரர், இழிந்த மலமுதலியவற்றையும் காணக்கூடிய தமதுநூலக்கண்ணுல் தெய்வ வடிவங்களைக் காண நேர்ந்தால் தமது நிட்கள (அருவ அநுபவ)த்தின் உயர்ந்தநிலைக்குப்பங்கம் வருமென்பர் எ-று.

வி-ரை. சகுணமென்ற உருவமும், பிரம்மம் என்ற அருவமுமான உபாசனைசெய்தற்கு உரியார் இவர் என்ற அதிகாரி, அநதிகாரி (உரியர், உரியரல்லாதார்) இலக்கணங்களை இந்தக்கவி விளக்குவதாம்.

மனிதர்கள் வசிக்கும் தேயம், பலவிதப்படுவதும், ஆங்காங்கு வழங்கும் மொழியும் அவ்வாறு ஆவதும், அவருள் சாதாரணமான பறவை, விலங்குகளுக்கு ஒப்ப, உண்ணல், உறங்கல் ஆதியவற்ருேடு காலம் கழிக்காமல், தெய்வவழிபாடென்னும் நெறியில் தொடர்புடையோர், தம்தம் தகுதிக்கு ஏற்றவாறு ஒரு தெய்வமும், அதற்கு ஏற்றமந்திர செபமும் கொண்டவிர்தல் இயல்பாதலால், "பலகலையின்மந்திரமும்" என்றும், அவ்வாறுகொண்டு செபிக்கும் மந்திரங்கள், உபதேசமுறையில் பலிதம் அடையக் கண்டுள்ளகாரணம் பற்றியே, பின்வருவோரும் கைக்கொள்ளுவதும் பலிதம்காண்பதும் உள்ளபடியால், ஆரம்ப உபாசகன் ஒருவன், அவ்விவரங்களை மனத்தால் ஆராய்ந்தும், கண்முன்பலிதத்தைகண்டும், தானும் அதுபோல் செபித்துவரும் மந்திரம் நற்பலனைத்தருமென்று மகிழ்ந்து அவ்வளவில் நின்று விடாமல், அதனிலுமேம்பட்ட உருவபாவனையான யோகசாதனைபற்றி, அதில்பலஅநுபவங்கண்டு, முன்புதான்கொண்ட மந்திரசெபத்தை வாயின் தொழிலெனக்கொண்டு, அதைச் சொல்லும் லையைக்கடந்து அமைவான் என்பதை வாயிகம் "எனச்சோல் பதமும் தாண்டி" என்று விளக்கிஞர், நிமலும்.

**அன்பளிப்பு :**

**தஞ்சாவூர்**

**நடராஜ பிள்ளை உலகநாதன் M.A.B.T**

உபாசனையின் இடைப் பட்டகாலத்தில், தன் மூர்த்தியே எல்லாமூர்த்தியும் ஆகும் என்ற உறுதி வரும் என்பதை "சமயவிகற்பமும்தீர்ந்து" என்றும், அத்தகையோர் அதன்பின் மற்றைய மூர்த்திகளாகவும், தன்மூர்த்தியாயும், பரம்பொருள் ஒன்றே விளங்கும் என்பதையறிந்து, யானையின்வடிவத்தில் கால், வால், காது, துதிக்கை, ஆகிய ஒவ்வொன்றைக் கையால் தடவியறிந்து கொண்ட குருடர்சிலர், அவ்வளவேயானையின் வடிவமென்று எண்ணி, உரல், முறம்-உலக்கைபோல்வதென்ற முறையில் ஓதி, ஒருவரோடு ஒருவர் வாதிட்டுஉழல்வர் என்றும், கண்ணுடைய ஒருவன், இவையெல்லாம் சேர்ந்த முழுவடிவம் யானை, மற்றவை ஒவ்வொரு பகுதியென்றறிவான். பிறருக்கும் விளங்கச்சொல்வான். அதுபோல எங்கும் நிறைந்த பரம்பொருளான பிரம்மம்ஒன்றின் அங்கங்களே ஒவ்வொருமூர்த்திக்குரிய சமயங்கள், அத்தனையும் கொண்டுள்ளபரம் ஒன்றேயென்று அறிந்தவனே சமரசஞானி என்றும், இதையறியாது ஒருபகுதிக்குரியசமயம் ஒன்றைப் பற்றி அதுவே உயர்வு என்றுவாதிடும்பேத முடையவன் குருடரோடு ஒப்பாவான். எல்லாமான பொருள்ஒன்று என்றறிந்து சமரசப்பாடல் இயற்றி யறிவிப்பவன் அறிவுத் தெளிவுடையவன் என்று விளக்க, "குருடரைத் தேற்றும் கவிதைபாடும் புலவர்" என்றுவிளம்பினர். அத்தகையோரே மூர்த்திஉபாசனைக்குஉரியவர் என்பர் "புலவருக்கே மூர்த்தி உபாசனைச்சூர் ஆகும்" என்விதந்தனரென்க.

அவரல்லாத மற்றோரான அருவவாதிகள்சிலர், உலகத்தில் இழிந்த பொருள்களைக் கண்டுசகிக்கும் தமது கண்களால், தெய்வத்தை உருவமாக்கண்டாலும் தமது (பேரலி) ஞானிலிகெடும் என்பார் என்பதை விளக்க, "மலமுதல்பார்க்கும்......

பங்கம்வரும் என்பார்' என்றோதினர். கண்டால் எனக்கூறியதுகொண்டு, இனம் பற்றி, தெய்வம் வடிவாவரும் என்று மனத்தால் நினைத்தாலும், அவ்வாறு கூறும்நூல்களைக் கேட்டாலும், அச்செய் தியை வாயால் கூறினாலும் "ஞானபங்கம்வரும்" என்பார் என்பது பெறப்படுகிறது. 22

சச்சிதா னந்தபரம் பொருளே எந்தச்
சமயத்தும் திகழுமெனச் சாற்றும் தன்மை
உச்சிமணிச் சேடன்மக மேரு வெற்பை
ஒருங்குபற்றல் போலும்,ஒரு மூர்த்தி தானே
நச்சியவா(று) ஒளிருமென்கை ஒருபைந் நாகம்
நவிலும்அதன் ஒருகுவட்டை நண்ணல் போலும்
மெச்சியுரைத் தற்கரிதாம் தனிவீட் டின்பம்
மேவுமவர்க்(கு) இவ்விரண்டும் விருப்பம் ஆமே.

பொ-ரை. சத்து, சித்து, ஆனந்தம் என்ற மூன்று வகையும் தானேயாகி விளங்கும் பரவத்துவான பொருள் ஒன்றே, உலகில் உயர்ந்தனவும் தாழ்ந் தனவும் ஆகிய சமயங்கள் அனைத்துள்ளும் பொருந்தி நின்று, அவ்வவர் எண்ணித்தியானிக்கும் பாவனைப் படி முன்னிலைப்படும் என்றறிந்து சொல்லும் நிலை யானது, எதைப்போலும் என்றால்; தனது தலையினி டம் மாணிக்கத்தையுடைய ஆதிசேடனானவன், ஆயிரம் சிகரங்களையுடைய மேருவெற்பினை தனது ஆயிரம் தலைகளால் தழுவிப்பற்றியதுபோல சிறப் பினது ஆகும்.

இயல்பாகத்தனக்கென ஒரு திருவுருவைக் கொண்ட ஒரு மூர்த்தியே, ஏனைய சமயத்தொண்டர் கள் கருதுகின்ற வடிவாயும் திருவுருக்கொள்ளும் என்று சொல்வதானது, ஒருதலையையுடைய நாகம்

ஒன்று முன்கூறிய மேருமலையின் ஒரு சிகரத்தை தனது ஒருதலையால் பற்றியதனை ஒக்கும். இந்த இருவிதமும், யாவராலும் வரையறுத்துக் கூறஇயலாப் பண்பின தான மேலாகிய வீடுபேற்றையடையும் பக்குவிகட்கு உடன் பாடு உடையன வேயாகும் எ-று.

வி - ரை. தெய்வத்தின் தன்மையைப் பற்றி உபாசகர் கொள்ளும் உறுதிகளின் இருபகுதியையும் விளக்கி, அவற்றிற்குப் பொருந்திய ஒரு எடுத்துக் காட்டினைக்கூறி, இரண்டும் கலந்த சமரசபக்குவ நிலையையும் சொல்ல இக்கவி எழுந்ததென்க.

சத்தாகிய ஆன்மாவும், சித்தாகிய தெய்வமும், இவற்றின் கூட்டுறவாகிய பேரின்பமாயுள்ளது பரம் பொருள் ஒன்றேஎன்பதை விளக்க'' சச்சிதானந்த பரம்பொருள்'' என்றார்.

பெயர், உருவம், குணம், குறி (அடையாளம்) இல்லாமல் அகண்டமாய் (எங்கும் நிறைந்ததாய்) நிட்களமாய் (உருவமில்லாமல்)' சூனியமாய் (அறிய முடியாததாய்) உள்ளது சுத்தப்பிரமம் எனக்கூறும் வேதாந்த நூலுக்கும் இணங்கி, சமய நூல்கள் கூறு கின்ற நிறபேத, அடையாளபேத, குணபேத, வரலாற்றுப்பேத, மந்திரபேதங்களின் படி ஒவ் வொன்றைப்பற்றி உபாசிப்போர்களுடைய பாவனை யின் படிதான் வேறுபாடில்லாப் பொருளாயிருந்தும் கூட, கருணையால் அவ்வவர்கருத்துப்படி முன்னிலைப் படும் பண்பினதென்று தமதநுபூதியிற்றெரிந்து கூறுவது மிகச்சிறந்த முடிவுஎன்பார் ''உச்சிமணிச் சேடன் மகமேருவெற்பை ஒருங்குபற்றல் போலும்' எனவும், புராண சிற்ப நூல்களிற் குறித்தபடி தம் மாற்கைக் கொண்டு வழிபடுதற்கு உரிய மூர்த்தி ஒன்றே உண்மையெனக் கூறி, அதுவேமற்றையர்

குறிப்பின் படியும், தனது கருணையாலும், திருவருள் வலிமையாலும் வடிவு கொண்டு காட்சி தரும் என்பது அதற்கடுத்த பகுதியாகவுள்ள பொதுச்சிறப்பு என்பார்'' ஒருபைந்நாகம் நவிலும் அதன் ஒரு குவட்டை நண்ணல்போலும்'' எனவும் கூறினர்.

மாயையென்னும் இருளிற் சிக்கி, ஆசையென்னும் சூறுவளிக்காற்றால் அலைப்புண்டு, பிறவியென்னும் பெருங்கடலில் வீழாமல், அறிவின் பலத்தால் தெய்வமாகிய மலையைப்பற்றிக் கொள்வது சிறப்பு ஆதலின், முற்றும் பற்றினாலும், ஒருபகுதியைப் பற்றினாலும், மனஒருமைப்பாட்டுடன் பற்றியவர்கட்கு, இடையூறற்ற நற்பயன் எய்துவது உறுதியாதியாதலின், பொருத்தமேயென்பார் 'வீட்டின்பம் மேவுமவர்க்கு இவ்விரண்டும் விருப்பம்'' என்று முடித்தனர். முடிக்கவே, இன்பவிருப்பம் (போக காமியம்) உள்ளோர் வெவ்வேறாகப் பேதித்து கண்ட (தூல) பாவனையிற் பற்றியும், வாதமிட்டுத் திரிவர் என்பதும், அவர்கூற்று பொருந்தியதாகாது என்பதும் அர்த்தாபத்தி (உள்கருத்தால்) கொள்ளக் கிடந்தன என்க.

பேதமாக என்தெய்வம், வேறுதெய்வம் எனக் கூறும் தன்மை நீங்கி, தனது தெய்வமே அனைவருக்கும் ஒத்துவிளங்கும் என்ற சமரசகுணம் பெற்று, அகண்டமானபரத்துக்கு அணித்தாயினான் என்பது பற்றி மேலோர் விரும்புவர் என்றார். 23

என்கடவு ளேஉயர்ச்சி யென்று சொல்வோன்<br>
இறுமாந்து நாட்கழியா(து) ஏங்கி வாடித்<br>
தன்கடவுள் திருவுருவைக் காண வேண்டித்<br>
தவித்தானேல் சமரசத்தோர் தம்மிற் சேர்வான்

பின்கடவுள் வேற்றுமைதோற் றுது சொன்னூற்
பிணங்கிடான் அவரோடும் பேசிக் கொள்வான்
முன்கடவுள் வரக்கண்டும் புவியோர் உய்யும்
முறைகருதிப் பலவாறு மொழிவார் உண்டே.

பொ - ரை. எனது உபாசனைக்குரிய தெய்வ மொன்றே மேம்பட்ட தகுதியின தென்று சொல் கின்ற சமயவாதி ஒருவன், தனது தெய்வத்தின் சிறப்புகளை எண்ணியும் பேசியும் இருந்த அளவில் வீண்காலம் போக்காமல், அந்தத் தெய்வத் திருவுருவை நேரில் காணும் பெரு விருப்பங் கொண்டு ஏக்கமும் வாட்டமும் உடைய வனுகத் தியானமுயன்று தவம் செய்வானுனல், சமரசத் தன்மையுடையமேலோருடன் கூடுவான். அந்தநிலைகைவந்தபின், மற்ருரது கடவுளைப் பேத முடன் பேசுகிறவாதம் அகலும். பேதக்கருத்துடைய பிறர், தம்கருத்தைப்பற்றிச் சொல்லும் போது அவர் பால் அதுதவறு என்று முரண்கொள்ளவுமாட்டான் தன்கடவுள் நேரிற்காட்சிதரப் பெற்றபின்பும்கூட, உலகத்துள்ள மக்கள் பத்திவழியில் நின்று பயன் பெறுதற்பொருட்டு, பலவித பேதம்படப்புராண முறைப்படி துதி கூறிப்பாராட்டு பவர்களும் சிலர் உலகில் உளராவர் எ-று.

வி-ரை. பேதவாத முடையோர் சமரச நிலையடைகற்குரிய நெறிமுறையும், சமரசநிலையுடைய மேலோர் மூர்த்திபேதம் கூறுதற்குக் காரணமும் இக்கவி கூறிற்று.

எந்தச் சமயத்திலும் உபாசகர்களுக்குத் தனது கடவுளே உயர்வு என்றும், ஏனையகடவுள் தாழ் வென்றும் கூறிவாதமிடும் தன்மை ஆரம்பநாளில்

உண்டாவது மரபு. ஆயினும், அந்தமட்டில் இறு மாந்து நின்று விடாமல், பேசியதுபோல கல்வியள விலறிந்தபடி அநுபவத்தில் தனது கடவுளைக் கண் முன்கண்டுவணங்க விரும்பி, அதற்கேற்ற தவமுயற் சியைமேற்கொள்ள வேண்டும். அவ்வாறு செய்யில் அறிவுமுதிர்ந்து உண்மைவிளக்கத்தால் பேதம் நீங்கிய சமரசஞானம் அடைதல் கூடும் என்பார் தவித்தானேல் சமரசத்தோர் தம்மில் சேர்வான்" என்றார்.

அவ்வாறு அடைந்தபின் நெடுநாட்களாக தான் கைக்கொண்டிருந்த தெய்வபேத உணர்ச்சி சிறிதும் தோன்றாது மாறும். மற்றுள்ள கீழ்ப்பக்குவிகளா னோர் பேதமுள்ளவரலாறுகளைத் தம்மெதிர் சொல் லக் கேள்வியுற்றபோது, அவர்களிடத்தில் தமது அநுபவமாயுள்ள சமரசக்கருத்தைக் கூறிமுரண மாட்டார்கள். ஏன் எனில்? முன்பு நாமிருந்ததுபோல் வாயளவிற்பேசும் நிலையில் இவர்கள் தற்போதுள்ள னர். இந்நிலைநீங்கி தியானயோகத்தில் பழகிமுயலுங் கால், நம்போல் சமரசமடைவர் என்று அமைதி கொள்வர். அதுவும் அன்றி, அவர்களுடன் ஒத்து வாயளவிற்பேசவும் செய்வார்கள் என்பதை அவ ரோடும் பேசிக்கொள்வான்" எனக்கூறினார்.

அங்ஙனமாயின், முன்னிலைக் காட்சிபெற்ற சிலரும்கூட, தமது பாடல்களில் மூர்த்திபேதங்கட் கேற்பக் கூறியுள்ளார்களே அது என்ன என்னும் ஐயத்தைவிலக்கவேண்டி "புவியோர் உய்யுமுறை கருதிப் பலவாறுமொழிவார் உண்டு" எனமுடித்தோ தினர். என்னை? உலக விவகாரநிலையிலிருந்து, பந்தம், முத்தி, என்ற செய்திகளில் சிறிதுசிறிதாக நுழைந்து ஆய்ந்துபழகும் ஆரம்பமாணவனுக்கு, முடிந்த சமரநிலையான தமது அநுபவத்தைச் சொன்னால்

*பயனற்றுப் போவதன்றி மாறுபாடும் விளையுமாதலின் என்க. பருவமாதின் அநுபவத்தைச் சிறுபெண் கேட்டல்போலும் ஆம் என்றறிக.* 24

சமயநெறி தொட்டுநின்று சாதித்(து) உண்மைத்
தவம்புரிந்து தன்னறிவே சாட்சி யாகச்
சிமையம் அலை வாரி கனல் வாளும் தெய்வத்
திருவருளாற் றுண்டி உய்ந்து சிந்தை வேட்கை
அமையநல்கும் குருவை நம்பும் சமரசச்சீர்
அநுபூதி உடையார்போல் அகில மாலில்
குமையுமவர் தம்மையெண்ணில் நிறத்தின் பெட்பால்
குலஎகினம் போல்வம் எனும் கோக்கோப் பாரே.

*போ - ரை. நான்குவேதங்களில் வரையறுக்கப்பட்ட ஆறுசமய நெறிகளைப்பற்றி, உறுதியுடன் தம் கொள்கையை உயர்வென்றுகொண்டு, உண்மையான தியான சிந்தனையாகிய தவத்திலமைந்து அதன் பயனாக தனது அந்தரங்க அநுபவச்சான்றாக, மலைமீதேறி உருளல், அலைநிறைந்த கடலிற்குதித்தல், வாளினால் தலையரிந்துகொள்ளுதல், நெருப்பிற்குதித்தல், ஆதியவற்றால் வைராகம்காரணமாக உயிரை விடக்கூடியநிலையை, தனதுவழிபாட்டுக் குரியகடவுளருளால் நீங்கி, செருக்ககன்று, மனதில் உண்டாகின்ற உத்தமவிருப்பங்களை எண்ணியபடி பெற்றுமகிழக் கொடுக்கின்ற சற்குருநாதரை, எங்கும் நிறைந்த பரம்பொருளின் வடிவமென்று நம்பி உறுதி கொள்ளற்கேற்ற சமரசநிச்சய அநுபூதியுற்ற பரஞான கௌமாரப் பெரியோர்களைப் போல, (பரஞானம் - அநுபவஅறிவு அபரஞானம்-கற்ற உணர்வு.)*

வெளிவேடமும் சொல்லும் போலியாகக்காட்டி, தேகாபிமான முதலியவற்றில் தடைபட்டுச் சுழல்கின்ற ஒருசிலரைப்பற்றி எண்ணும் போது, கற்றறிந்த அளவில்பேசும் அவர்களது தகுதியானது, உடலின் வெண்மைநிறம் அமையப்பெற்ற ஒன்றை மட்டும்கொண்டு, மற்றைய சிறப்பியல்பமையப் பெறுமல் உள்ளகொக்கு, பறவையினத்தில் உயர்ந்த அன்னப்பறவைக்கு ஒப்பாவோம் என்றெண்ணி இறுமாப்புக் கொண்டதுபோலும் எ - று.

வி - ரை. கலையுணர்வு, அநுபவவுணர்வு என்ற இரண்டினுள், முன்னையதுகாரணமும், பின்னையது காரியமும் ஆகும், முந்தியகலையுணர்வு ஒன்றையே நிறைவாகக்கொண்டு, செருக்கடைதல் பழுதென்பதை உவமானத்தால் விளக்கி, பிந்திய அநுபூதி நிலையேசிறந்ததென்பதைக் குறிப்பால் இக்கவி உணர்த்தியதென்க.

பூமியிலிருந்து மேல்நிலைமாளிகையொன்றையடைய விழைந்தோன், ஏணியிலுள்ள படிகளின் வழிசென்று குறித்தஇடத்துக்குச் சேர்வதுபோல, உலகியல்விவகார நிலையில்நின்று உண்மைஞான நிலை என்னும் பதவியையடையப் புண்ணியத் தொடர்பால் முயல்பவன்ஒருவன், வேதமென்ற பொது நூலில் பொதுக்குருவினுல் வரையறுக் கப்பட்டுள்ள சமயஒழுக்கங்களை ஆதரவாகக்கொண்டே பயன்பெற வேண்டும் என்பதை "சமயநெறிதோட்டுநின்று, சாதித்து" எனவும், ஏனையவைதாழ்வென்றுசாதிக்கும் கீழ்ப் படிகளைக் கடந்தஇடத்து, தனதுமூர்த்தியே எல்லாம் ஆனது என்று உணர்ந்து, தியானமியற்றுதற்குரிய பத்திமார்க்கமான உபாசனைமுறை அமையும் என்பதை "உண்மைத் தவம்புரிந்து" எனவும் கூறினுர்.

* சிமையம்-மலை. அலைவாரி-கடல்.

அவ்வாறு உபாசிக்கும்போது, இடையில் வைராகம் என்னும்படியானது நேரும். அதன் செயலாவது, உலகவிவகாரத் தொல்லைகளையும், அதற்கு ஆதரவாய்நின்று தன்னைவருந்தச் செய்கின்ற உடலையும் வெறுத்து, மலை, கடல், நெருப்பு, வாள், முதலியவற்றால் உயிரைவிடத்துணிவதும், அத்துணிவு, ஓரோர்சமயம் பயன்தருவதும், பெரும்பாலும் தவறநேருவதும் கூடும். அது, தற்போத மேல்நிலைமுனைப்பாகும், தற்போத இழப்புக்கு ஏதுவான அன்பு நெறிக்கு இணையாகாது. ஆதலின், அவ்விதமான வைராக்கிய நெறியிற் சென்று உழலாமல், அன்பு மயமான சமரசஞானவழிபாடு, திருவருட் செயலால் அடையப்பெறுதல் வேண்டும், ஆகவே, "தெய்வத்திருவருளால் தாண்டி" எனவும், அதன்பின்னும் வைராகம் கடந்தோரும் பின்னும் செருக்கு மூடாமல் காத்தல் வேண்டுமென்பதை. "உய்ந்து" எனவும் கூறினர். இதுவரை, நடுப்பாகப் படிகளாம்.

சமயவாதமாகிய கருமமார்க்கமும், உபாசனைத் தவமாகிய பத்திமார்க்கமும், அதனிடையில் நிகழும் வைராகநிலையும்கடந்த முதிர்ச்சியில், சகள நிட்கள (உருவஅருவ) சமரச வுணர்வு பெற்று, குருநாதனுவான் பரம்பொருளின் கருணைத்திருவுரு என்று உண்மை நம்பிக்கைகொண்டு, ஞானத்தின் அங்கமாக சரியையாதியவற்றை அநுட்டிக்கும் கௌமார மேல்நிலைப்படியைப் பெறுதல் கூடும். இதுவே முடிந்தசாயுச்சியமான பரமுத்தியின் அணுக்கநிலையாகும். இந்நிலையடைவோர் மிகச்சிலராவார்.

அத்தகைய மேலோர்கள், தகுதிபோல் கலையுணர்வால் அவ்விஷயங்களைக்கற்றறிந்து, யுத்தியினாற் பொருந்தப்பேசி, அதற்கேற்றவேடப் பொலிவு

கொண்டு, பிறரறியாநடித்து, தமது மனம் மூவித ஆசைகளிற்பற்றி நிற்பவரும் உள்ளனர். அவர் நிலைமை அன்னப்பறவைபோல நிறத்தில்ஒத்து, ஏனையவகை யாதும் ஒவ்வாத கொக்குக்கு இணையாம் என்பதை "நிறத்தின்பெட்பால் குல* எகினம் போல்வம் எனும் கோக்குழப்பார்" எனக் கூறி முடித்தார். 25

எத்தெய்வம் சீக்கிரத்திற் கருணை செய்வ(து)
எனவிசா ரிப்பவன்புண் ணியமட் டுள்ளோன்,
இத்தெய்வ மேஎனதென் றுரைப் போன் முன்னாள்
ஏன்றமட டில் உபாசித்தோன்; ஏதே (து) எல்லாம்
பொய்த்தெய்வம் என்பவன்மா பாவி; வானிற்
புலவர்பிரான் ஆதியராய்ப் புவியில் வந்தோர்
மெய்த்தெய்வ மேகுருவாய் அறிவில் நின்று
விளக்குவதால் அளவிலின்பம் மேவு வாரே.

போ - ரை. கடவுள் உபாசனைசெய்ய விரும்புவோன்ஒருவன், அந்நிலை யுடையாரிடத்தில், அதிவிரைவில் திருவருளைக்கொடுக்க வல்லகடவுள் எது எனவினவுவானானால், அவன் முன்னைய பிறவிகளில் நல்வினைத் தொடர்புமட்டுமே உடையவனாவான். அவ்வாறின்றி தானாகவே இதுதான் எனது சொந்த மூர்த்தியென ஒருவடிவத்தைக் கொள்வானேயானால், தன்னால் ஏன்றவரை தியானசெபங்களியற்றிய தொடர்புஉடையவனாவான். புராண சிற்பங்களால் சொல்லப்படுகிற கடவுள் என்பதொன்றுமில்லை. யாவும்பொய் கற்பனை, என்று கூறுபவன், பெரிய பாவமுடையவனாவான். தேவேந்திரன் முதலியோர் திருவருளியக்கம் காரணமாக ஒவ்வோர்காலம் பூவுல

எகினம்-அன்னப்பறவை.

கத்தில் அவதரிப்பவர்கள் சிலர், உண்மை வடிவான பரம்பொருள் சற்குருவடிவாக தியானயோகத்தில் நிலைத்த தமதறிவில் முன்னிலைப்பட்டும், கலந்து நின்றும் பலஅரியவற்றை விளக்குவதால், எல்லையற்ற பேரானந்த அநுபவம்பெறுவர் எ-று. ஏ-அசை.

வி-ரை. தெய்வ நிச்சயவிஷயம், தத்தம் பக்குவங்கட்கு ஏற்றவாறு செயல்படுவதில், ஐயமானவினு, அபிமானமான உறுதி, மறுப்புமொழி, உண்மைத் தெளிவு, என்ற நான்குபகுதிகளைக்காட்டி, அவற்றிற்கு உரியவர் தகுதிகளையும் விளக்க இக்கவி எழுந்ததென்க.

மனிதஉடம்பெடுத்த உயிர்களில், தேகபோக விஷயத்தில் முற்றும் அமிழ்ந்தவர் தவிர, மேம்பட்டுத் தெய்வசம்பந்தஉணர்வு வரப்பெற்றோருள், புராண சாத்திரங்களிற் பலவிதமூர்த்திபேதங்கள் சொல்லக் கேட்டு, அவற்றுள் ஏதேனும் ஒன்றை நாம்வணங்கிப்பயன்பெறவேண்டுமென்னும் விருப்பம் தோன்றி, எந்தத்தெய்வம் குறுகியகாலத்தில் அருள்செய்வது எனக்கேட்டறியும் பருவம், முன்பிறவியிலியற்றிய தீவினைகுறைந்து நல்வினைப்பயனுகிய புண்ணியம் பெருகியபோது அமைவதாகும் என்பதை "விசாரிப்பவன் புண்ணியமட்டுள் ளோன்" என்றும், முற்பிறவியில் அவ்வாறு தெரிந்து ஒரு மூர்த்தியைப்பற்றி இயன்றவரை உபாசனையில் முயன்ற தொடர்பு உடையவனுக்கு, இதுவேமுன் எனது தெய்வமென்று உரிமைகொண்டு கூறுந்தன்மை அடுத்த இப்பிறப்பில் அமையும் என்பதை "முன்னுள் ஏன்ற மட்டில்உபாசித்தோன்" என்றும், கூறினார்.

அவ்வாறின்றி முற்பிறவிகளில் நல்வினைசற்றுமின்றி, தீவினைமிகுதியும் அமையப் பெற்றபோது,

சாத்திரம், சமயங்கள், மூர்த்திகள். தவஒழுக்கங்கள், நரக சுவர்க்க முத்திகள் யாவும் பொய்யென முரண் கொண்டு வாதிக்கின்ற தீக்குணம்வினையுமென்பார் "எல்லாம் பொய்த்தெய்வம் என்பவன்மாபாவி" எனவும், மேல்நிலைப்புண்ணிய பூமிகளில் தலைமையாகவாழ்ந்து, பின் உலகநன்மைப் பொருட்டு தெய்வச் செயலால் அவதரித்த பெரியோர், சகலவிளக்கங்களும் தமது அறிவில் திருவள்வடிவக் குருநாதனால் அறிவிக்கப் பெற்றுப் பேரின்பம் அநுபவத்தில் அமைவது கூடு மென்பார் "அறிவில்நின்று விளக்குவதால் அளவில் இன்பம் மேவுவார்" எனவும் கூறினர். எனவே தூலமுறையிற் சிறிதுகற்றாலும் சூக்குமத்தில் யாவும் எளிதில் உணர்வர் என்பதுபெற்றாம். 26

தெய்வவுருத் தியானநெறி சிறிதும் இன்றிச்
சேபமொன்றே செய்குவது சிதடர் மார்க்கம்
ஐவகையாம் பொறியும்அடங் கிடச்சற் றேனும்
அசையாது குறியில்நிற்றல் ஆன்றோர் கொள்கை
மெய்வழக்காம் சமரசம்தேர்ந்(து) இரண்டும் தோய
விரும்புவது சித்தர் குணம்: மேனாள் பூசித்(து)
உய்வனுப்போன் றாயினும்பெற் றிருந்தோர்க் கன்றி
உயர், புகழ்த்,தீஞ் சுவைத், துதி,வாக்(கு) உதித்திடாதே

போ - ரை. முதலாவதாக தெய்வத்தினது திரு வுருவபாவனை முறை சற்று மில்லாமல். செபமென்ற மந்திர உச்சரிப்பு மட்டும் செய்வது. அறிவுத் தெளிவற்ற சாதாரணமக்களின் வழியாகும். அதை விடுத்து இரண்டாவதாக மெய்வாய் கண்மூக்கு செவி என்னும் புலன்கள் ஐந்தையும், அதனதன்செயல் களிற் செல்லவிடாமல் அடக்கி, தமக்கேற்ற ஒரு திருவுருவ நாட்டத்தில் நிலைத்து நிட்டைபுரியுந் தன்மையானது, மிகச்சிறந்தமேலோர் முறையாகும்.

இவற்றுடன் மூன்றாவதாக, உண்மை நிச்சயமாகிய, வேறுபாடற்ற ஒருமைப்பட்டு மந்திர முரைத்தல், வடிவம் நினைத்தல் என்ற இரண்டையும் ஒருங்கே கைக்கொண்டு உபாசிப்பது கண்கூடான அருட்சித்தி களியற்ற விரும்புகின்ற மேற்பக்குவிகளது தன்மை யாகும்.

முந்திய பிறவிகளில் ஒருமூர்த்தியைவழிபட்டு ஆன்ம ஈடேற்றத்துக்கான திருவருட்பேறு ஒருசிறி தாவது பெற்றவர்களுக்கன்றி, மேலான, புகழுக்கேது வான, இனியசுவையுடையதுதிப்பாடல்களைப் பாடு தற்கான புலமை ஏற்படாது எ-று ஏ. அசை

வி - ரை. தெய்வவழிபாட்டு நெறிக்கண் தொடர்பு கொண்டவரது தகுதியை மூன்றுபிரி வாகக் காட்டி தோத்திரப்பாடல் இயற்றுந்திறமை யடைவோர் இவர் என்னும் விவரம்கூறி, இக்கவி அமைந்ததென்க.

தவம்செய்தல் வேண்டுமென்று விருப்பமிகுந்து தொடங்கியும், பக்குவவேறுபாட்டால் சிலர் தனக்குக் கிடைத்த ஒரு மந்திரத்தை உச்சரிப்பதே கடமையாகக் கொண்டு அந்த மந்திரத்துக்கு உரிமையான கடவு ளின் வடிவபாவனையானதியானமுறை சிறிது மில் லாமல் இருப்பது முறையல்ல என்பார் "சேபமொன்றே செய்குவது சிதடர் மார்க்கம்" என்றும், மனத்தை ஒரு வழிப்படவிடாமல் தத்தம் வழியிர்த்து அலைக்கின்ற ஐந்து இந்திரியங்களை ஒடுக்கி மனம் அசைவற ஒரு வகைத்தெய்வ வடிவபாவனையில் நிலைக்கச் செய்து மந்திரசெபமின்றிநிட்டை கூடுதல் மிகச்சிறந்தமேல் நிலை என்பதை "குறியில் நிற்றல் ஆன்றோர் கோள்கை" எனவும் உலகநன்மைகருதிக் கண்கூடான பலிதசித் தியை மூர்த்திமுன்னிலையிற் பெறவிரும்பி உழைக் கின்ற பக்திநெறிப்பக்குவிகளாவோர் முந்தியவர்

கொள்ளும் மந்திரசெபமும், பிந்தியவர்கொள்ளும் வடிவபாவனையும், ஒருங்கேயமையக் கொண்டு உபாசிப்பார் என்பதை "இரண்டுதோய விரும்புவது சித்தர் குணம்" எனவும் கூறினர்.

அதுவன்றி, தெய்வவழிபாட்டின் கூறுபாடான, காயிகம் (உடம் பால்தொண்டியற்றல்) வாயிகம் (வாயால் துதித்தல்) மானதம் (மனத்தால் நினைத்தல்) என்னுமிவற்றில், நடுவதான வாயிகமாவது காயிகம் போலச் சாதாரணமும் இன்றி, மனத்தை ஒடுக்கிச் செய்யும் காரணமான நிட்டைபோல மேலான தன்மையுமின்றி மனதை வேறு உலக விடயங்களிற் செல்லவிடாமல், தனது மூர்த்தியின் வஷவ அமைப்பிலும் அருட்செயல்களிலும் விரிந்து செல்ல விடுத்து, செயல்படுகின்ற தனக்குமட்டும் இன்பந் தருகின்ற உடற்பணி (காயிகம்), மனநினைவு (மானதம்), போலின்றி தனக்கும் பிறர்க்கும் நீண்டகால இன்பந் தருதற்குரிய சிறப்பினது வாயினுற்றுதி செய்தலென்பதாம்.

அத்தகைய துதிப்பாடல்களை, சொற்சுவை பொருட்சுவையமைய அன்புடன் பாடும் இனிய வாக்கு, முற்பிறவியில் அவர் செய்த பூசையின்பலனுற்கிடைக்கப் பெற்றதாகும் என்பது தோன்ற,

> "உய்வு அணுப்போன்றுயினும் பெற்றிருந் தோர்க்கன்றி
> உயர் புகழ்த் தீஞ்சுவைத் துதிவாக்(கு) உதித்திடாது"

என்றூர்.

ஆகவே, வேறுபலர்க்கும் கவிபாடும் வாக்கு உண்டாகுமாறுலும், அவை புகழும் புண்ணியமும் உடையதாகாது. தனது அறிவாற்றலாற் பாடப்படுவதாகி, காட்டில்எறிக்கும்நிலவும் கடலிற் பெய்யும் மழையும்போல, பயனற்றதும், உடை-பூண், முதலிய சிறுபயன் தரக்கூடியதும், ஆடம்பரம், சினம்

இச்சை, முதலிய தீக்குணவசப்பட்டதும் ஆகியொழி யும் என்பதாயிற்று.

எனவே, உபாசனையால் வரும்வாக்கின் சிறப்பை வலியுறுத்தவேண்டி, புகழ், உயர்புகழ் என்றும் தீம் - சுவை-துதி. என்றும் அடைமொழி கொடுத்துச் சிறப்புக்கூறிய நயம்காண்க. 27

மலமான களிம்புறுசெம் பனைய நெஞ்சை
மாதவமாம் கனலில்இட்டு வல்லோர் சொல்லும்
நலமான மருந்ததனுல் வேதிப் போரே'
நனவுகன வினிற்றிகழும் ஞாயம் எல்லாம்
குலமாற்றே, சித்தியெனும் வங்கத் துக்குக்
குலையாமல் நிற்குமுன்னம் குதிக்க வேண்டாம்
பலகோடி பகையுண்டு ; பதறு வீரேல்
பழிப்புண்டாம்; அநுபவத்தைப் பகர்ந்திட் டேனே

போ-ரை. ஆணவம், கன்மம், மாயை, என்று சொல்லப்படுகின்ற மும்மலங்களான, களிம்பு தோய்ந்த, தாழ்வான மனத்தை, பெருமை மிக்க தவமான நெருப்பிற் பொருந்தவைத்து, திருவருள் பெற்ற மேலோர்களால் உத்தமநூல்களிற் கூறப் பட்ட ஒழுக்கநியமங்களான மருந்தின் துணைகொண்டு பேரறிவுஎன்ற பொன்னுகமாற்ற முயல்கின்ற தவமுடையவர்களே! உமது தியானவழிபாட்டின் போது நனவு, கனவு என்ற அவத்தைகளில் உங்கட்கு நேருகின்ற அநுபவக் காட்சிகள்யாவும் உயர்ந்த பொன்னுக்குரிய நிறத்தைக் காட்டுகின்ற மாற்றுஎன்னும் பருவமேயாகும், அதுவேமுடி வல்ல (நல்லசகுனம்போல என்பதாம்.)

சித்தியை உலகர்கண்காண நடத்தி, திருவருள் வல்லமையை வெளிக்காட்டத்தக்க அருளாட்சி

(சித்தி) என்ற காரியத்தின் சோதனைக்கு கெட்டுப் போகாமல் நிலைக்கக்காணுமுன்பு, திருத்திமே லீட்டால் துள்ளுதல் கூடாது. நீங்கள்காணும் அநுபூதிநெறி கட்குப் பலவித இடையூறுநேருதல் கூடும், அவற்றை எண்ணுமல் அவசரப்படுவீர்களா ளுல், வந்த அநுபவங்களும் மாறி, பலரால் இகழவும் கூடிய நிலையேற்படும். இது சொந்த அநுபவத்திற் கண்டவுண்மை. உரிமைகாரணமாக உங்கட்கு ஓதினேன். எ-று ஏ-அசை.

வி - ரை. உபாசனை வழியில் அமைந்தோர் இடையில் நேரும் பலஅநுபூதிகளைக்கண்டு மகிழ்ந்து கெடாமல், முயல்வது வேண்டுமென்பதும், அதற்கு ஓர் எல்லையும், அவ்வாறு அமையாதபோது வரும் தீங்கும் கூறித்தேற்றுவது இக்கவியாகும்.

உயிர்களின் மனமானது, மாயையின் தொடர் பால் நான், எனது என்னும் அகங்கார மமகாரம் ஆகிய களங்கமுற்று, தனதுஇயல்பான உண்மை தோன்றுநிலையில் உள்ளதென்றறிந்து, அதுசெம் பிற்களிம்புபோல் அமைந்த தென்பதை "மலமான களிம்புறு செம்பு அனையநெஞ்சை" எனவும், அதை ரசவாதிகள் நெருப்பில் புடத்தில்வைத்து, ரசகுளிகை யினுல் பொன்னுக்குதல் போல்வது, பெரியோர் சொல்லும் நூற்கருத்தைதச்சிந்தையிற் கொண்டு நடந்து, மாயாமயத்தைமாற்றி ஞானமயமாக் குதற்கென அன்பர்கள் தவமுயற்சி செய்வர் என் பதை, "வல்லோர் சோல்லும் நலமான மருந்ததனுல் வேதிப்போர்" எனவும், அவர்கட்கு உபாசனையில் கனவு நனவுகளில் தோற்றுகின்ற அநுபூதிகளெல் லாம் செம்பினிடத்துப் பொன்னின் நிறம்மட்டும் தோற்றுதல்போல் பரஞான (கற்றறிதலின்) விளக் கத்தால் நல்ல சகுனமென்ற தோற்றமேயாம்.

அவ்வளவே முடிவெனக் கொள்ளுதல் தவறு என்பதை "ஞாயம் எல்லாம் குலமாற்றே" எனவும் கூறினர்.

ஆயின் அந்தப்பொன்னில் தோற்றும் மாற்று (நிறம்) உறுதியானதா, குறைந்ததா என்பதைச் சோதிப்பதற்கு, வங்கம்என்ற காரீயத்தைக் கலந்து உருக்கினால் போலியாளுற் செம்பாகவேமாறும், உண்மைப் பொன்ளுனல் தங்கம் மாற்றுயர்ந்து காணப்படும். அதுபோல, தியானகாலத்தில் ஏற்பட்டஅநுபவங்கள், கண்காண நடக்கும்வரை அதனால் மகிழ்ந்து முயற்சியில் தளரக்கூடாது என்பதை "சித்தியேனும்வங்கத்துக்குலேயாமல் நிற்கு முன்னம் குதிக்கவேண்டாம்" எனவும், கூறி, வலியுறுத்தினரென்க. போலிப்பொன்னுக்கு, காரீயம், சோதனைக் குரியதாதற்போன்று, அநுபவஞானத்துக்கு, சித்தி சோதனைக்குரியதாயிற்று. சோதனையில் பலிதமில்லையானல் இரண்டிலும் திடமில்லை என்பதாம்.

அவ்வாறு சித்தியில்லாதஞானத்தை மெய்யாக நம்பிமகிழ்வு கொண்டால் பழிப்புக்கிடமாகும். அப்படிப்பலிதமாகக்காணுமுன் பலதடைகள் அகத்தும்புறத்தும் பலவுளவாம் என்பதை, "பலகோடி பகையுண்டு, பதறுவீரேல் பழிப்புண்டு" எனவும், இதனை எடுத்துக்கூறியது யுத்திவாதமன்று, எனதுஅநுபவத்திற்கண்டவுண்மை என்பதை "அநுபவத்தைப்பகர்ந்திட்டேன்" எனவும் கூறித்தெளிவித்ததறிக. 28

*கண்டமெனப் பலர்நுவலும் சகளநாட்டக்
காரருக்கும் தளிஅகண்டாகார ஞானம்
உண்(டு), அதுதான் வேறுதெய்வம் இலையென்(று) ஓர்தல்,
உயர்அகண்ட மெனப்பகர்நிட் களத்தை உன்னும்

தோண்டரினும் மாயை†விராட் டாதி யாகச்
சோல்லுகின்ற கண்டபா வனையோர் உண்டு
விண்டவிதம் இரண்டும் ஒன்றுக் கலந்த ஞாயம்
மெய்த்தவத்தோர் சத்தியத்தில் விளங்கும்; அன்றே.

போ - ரை. தெய்வமானது, போகவரஉள்ள துண்டுப்பொருள் என்று பலரால் கூறப்படுகின்ற உருவத்தியானப் பழக்கமுடையவருக்கும், ஒப்பற்ற பரிபூரண (எங்கும்நிறைந்த) வத்து (பொருள்) நம் கடவுள்என்று அறியும் அநுபவஉணர்ச்சியுண்டு. அவ்வுணர்ச்சிதான் தனது மூர்த்தியே அனைத்துப் பொருளும் என்றறியும் தெளிவாகும். அதுபோல, மேலான அகண்டப்பொருளென்று பலரால்கூறப் படுகின்ற அருவப் பொருளைச் சிந்திக்கின்ற உபாசகர் களிலும், அஞ்ஞான மறைப்பாகவுள்ள மாயையும், உலகத்தின் பெருவடிவமான விராட்புருடவடிவ முதலாகச் சொல்கின்ற கண்டபாவனை யோர்களும் உண்டு.

சொல்லப்பெற்ற கண்ட அகண்டமாக (துண் டாயும், விரிவாயும்) உள்ளதாக ஒன்றில் மற்றொன்று விரவிவிளங்கும் கடவுள்தன்மையானது, உண்மையான தவமுடையவரது கருத்தின் நிச்சயத் தில் அறியப்படுவதாகும். எனவே, போலித்தவத்தோர் இதன்உண்மைஅறிய முடியாதென்பதாயிற்று எ-று அன்றே-அசை.

வி-ரை. கண்டபாவனை, அகண்டபாவனைகளைத் தனித்தனியே கொள்வோர்தன்மையும், அவ்விரண்

* கண்டம் - போக்குவரவுள்ளது எனத் தெய்வத்தைக் கொள்ளும் நிலை. † விராட்சொருபம்-உலகத்தைத் ஒருமனித் வுருவாகக் கருதுதல்.

இச்சை, முதலிய தீக்குணவசப்பட்டதும் ஆகியொழி யும் என்பதாயிற்று.

எனவே, உபாசனையால் வரும்வாக்கின் சிறப்பை வலியுறுத்தவேண்டி, புகழ், உயர்புகழ் என்றும் தீம் - சுவை-துதி. என்றும் அடைமொழி கொடுத்துச் சிறப்புக்கூறிய நயம்காண்க. 27

மலமான களிம்புறுசெம் பனைய நெஞ்சை
மாதவமாம் கனலில்இட்டு வல்லோர் சொல்லும்
நலமான மருந்ததனால் வேதிப் போரே'
நனவுகன வினிற்றிகழும் ஞாயம் எல்லாம்
குலமாற்றே, சித்தியெனும் வங்கத் துக்குக்
குலையாமல் நிற்குமுன்னம் குதிக்க வேண்டாம்
பலகோடி பகையுண்டு ; பதறு வீரேல்
பழிப்புண்டாம்; அநுபவத்தைப் பகர்ந்திட் டேனே

போ-ரை. ஆணவம், கன்மம், மாயை, என்று சொல்லப்படுகின்ற மும்மலங்களான, களிம்பு தோய்ந்த, தாழ்வான மனத்தை, பெருமை மிக்க தவமான நெருப்பிற் பொருந்தவைத்து, திருவருள் பெற்ற மேலோர்களால் உத்தமநூல்களிற் கூறப் பட்ட ஒழுக்கநியமங்களான மருந்தின் துணைகொண்டு பேரறிவுஎன்ற பொன்னாகமாற்ற முயல்கின்ற தவமுடையவர்களே! உமது தியானவழிபாட்டின் போது நனவு, கனவு என்ற அவத்தைகளில் உங்கட்கு நேருகின்ற அநுபவக் காட்சிகள்யாவும் உயர்ந்த பொன்னுக்குரிய நிறத்தைக் காட்டுகின்ற மாற்றுஎன்னும் பருவமேயாகும், அதுவேமுடி வல்ல (நல்லசகுனம்போல என்பதாம்.)

சித்திலை உலகர்கண்காண நடத்தி, திருவருள் வல்லமையை வெளிக்காட்டத்தக்க அருளாட்சி

(சித்தி) என்ற காரியத்தின் சோதனைக்கு கெட்டுப் போகாமல் நிலைக்கக்காணுமுன்பு, திருத்திமே லீட்டால் துள்ளுதல் கூடாது. நீங்கள்காணும் அநுபூதிநெறி கட்குப் பலவித இடையூறுநேருதல் கூடும், அவற்றை எண்ணுமல் அவசரப்படுவீர்களா ஞல், வந்த அநுபவங்களும் மாறி, பலரால் இகழவும் கூடிய நிலையேற்படும். இது சொந்த அநுபவத்திற் கண்டவுண்மை. உரிமைகாரணமாக உங்கட்கு ஓதினேன். எ-று ஏ-அசை.

வி-ரை. உபாசனை வழியில் அமைந்தோர் இடையில் நேரும் பலஅநுபூதிகளைக்கண்டு மகிழ்ந்து கெடாமல், முயல்வது வேண்டுமென்பதும், அதற்கு ஓர் எல்லையும், அவ்வாறு அமையாதபோது வரும் தீங்கும் கூறித்தேற்றுவது இக்கவியாகும்.

உயிர்களின் மனமானது, மாயையின் தொடர் பால் நான், எனது என்னும் அகங்கார மமகாரம் ஆகிய களங்கமுற்று, தனதுஇயல்பான உண்மை தோன்ருநிலையில் உள்ளதென்றறிந்து, அதுசெம் பிற்களிம்புபோல் அமைந்ததென்பதை "மலமான களிம்புறு செம்பு அனையநெஞ்சை" எனவும், அதை ரசவாதிகள் நெருப்பில் புடத்தில்வைத்து, ரசகுளிகை யிஞல் பொன்ஞக்குதல் போல்வது, பெரியோர் சொல்லும் நூற்கருத்தைச்சிந்தையிற் கொண்டு நடந்து, மாயாமயத்தைமாற்றி ஞானமயமாக் குதற்கென அன்பர்கள் தவமுயற்சி செய்வர் என் பதை, "வல்லோர் சொல்லும் நலமான மருந்ததஞல் வேதிப்போர்" எனவும், அவர்கட்கு உபாசனையில் கனவு நனவுகளில் தோற்றுகின்ற அநுபூதிகளெல் லாம் செம்பினிடத்துப் பொன்னின் நிறம்மட்டும் தோற்றுதல்போல் பரஞான (கற்றறிதலின்) விளக் கத்தால் நல்ல சகுனமென்ற தோற்றமேயாம்.

அவ்வளவே முடிவெனக் கொள்ளுதல் தவறு என்பதை "ஞாயம் எல்லாம் குலமாற்றே" எனவும் கூறினார்.

ஆயின் அந்தப்பொன்னில் தோற்றும் மாற்று (நிறம்) உறுதியானதா, குறைந்ததா என்பதைச் சோதிப்பதற்கு, வங்கம்என்ற காரீயத்தைக் கலந்து உருக்கினால் போலியானால் செம்பாகவேமாறும், உண்மைப் பொன்னானால் தங்கம் மாற்றுயர்ந்து காணப்படும். அதுபோல, தியானகாலத்தில் ஏற்பட்ட அநுபவங்கள், கண்காண நடக்கும்வரை அதனால் மகிழ்ந்து முயற்சியில் தளரக்கூடாது என்பதை "சித்தியேனும்வங்கத்துக்குக்குலையாமல் நிற்கு முன்னம் குதிக்கவேண்டாம்" எனவும், கூறி, வலியுறுத்தினாரென்க. போலிப்பொன்னுக்கு, காரீயம், சோதனைக் குரியதானாற்போன்று, அநுபவஞானத்துக்கு, சித்தி சோதனைக்குரியதாயிற்று. சோதனையில் பலிதமில்லையானால் இரண்டிலும் திடமில்லை என்பதாம்.

அவ்வாறு சித்தியில்லாதஞானத்தை மெய்யாக நம்பிமகிழ்வு கொண்டால் பழிப்புக்கிடமாகும். அப்படிப்பலிதமாகக்காணுமுன் பலதடைகள் அகத்தும்புறத்தும் பலவுளவாம் என்பதை, "பலகோடி பகையுண்டு, பதறுவீரேல் பழிப்புண்டு" எனவும், இதனை எடுத்துக்கூறியது யுத்திவாதமன்று, எனதுஅநுபவத்திற்கண்டவுண்மை என்பதை "அநுபவத்தைப்பகர்ந்திட்டேன்" எனவும் கூறித்தெளிவித்ததறிக. 28

*கண்டமெனப் பலர்நுவலும் சகள நாட்டக்
காரருக்கும் தளிஅகண்டா கார ஞானம்
உண்(டு), அதுதான் வேறுதெய்வம் இலையென்(று) ஓர்தல்,
உயர்அகண்ட மெனப்பகர்நிட் களத்தை உன்னும்

தோண்டரினும் மாயை†விராட் டாதி யாகச்
சொல்லுகின்ற கண்டபா வனையோர் உண்டு
விண்டவிதம் இரண்டும் ஒன்றாக் கலந்த ஞாயம்
மெய்த்தவத்தோர் சத்தியத்தில் விளங்கும்; அன்றே.

போ - ரை. தெய்வமானது, போகவரஉள்ள துண்டுப்பொருள் என்று பலரால் கூறப்படுகின்ற உருவத்தியானப் பழக்கமுடையவருக்கும், ஒப்பற்ற பரிபூரண (எங்குமிநிறைந்த) வத்து (பொருள்) நம் கடவுள்என்று அறியும் அநுபவஉணர்ச்சியுண்டு. அவ்வுணர்ச்சிதான் தனது மூர்த்தியே அனைத்துப் பொருளும் என்றறியும் தெளிவாகும். அதுபோல, மேலான அகண்டப்பொருளென்று பலரால்கூறப் படுகின்ற அருவப் பொருளைச் சிந்திக்கின்ற உபாசகர் களிலும், அஞ்ஞான மறைப்பாகவுள்ள மாயையும், உலகத்தின் பெருவடிவமான விராட்புருடவடிவ முதலாகச் சொல்கின்ற கண்டபாவனை யோர்களும் உண்டு.

சொல்லப்பெற்ற கண்ட அகண்டமாக (துண் டாயும், விரிவாயும்) உள்ளதாக ஒன்றில் மற்றொன்று விரவிவிளங்கும் கடவுள்தன்மையானது, உண்மையான தவமுடையவரது கருத்தின் நிச்சயத் தில் அறியப்படுவதாகும். எனவே, போலித்தவத்தோர் இதன்உண்மைஅறிய முடியாதென்பதாயிற்று எ-று அன்றே-அசை.

வி-ரை. கண்டபாவனை, அகண்டபாவனைகளைத் தனித்தனியே கொள்வோர்தன்மையும், அவ்விரண்

* கண்டம் - போக்குவரவுள்ளது எனத் தெய்வத்தைக் கொள்ளும் நிலை. † விராட்சொரூபம்-உலகத்தைத் ஒருமனித் வுருவாகக் கருதுதல்.

டின் கலப்புத்தன்மையும், அதையறியும் பக்குவி களின் தன்மையும் இக்கவிகூறிய தென்க.

தெய்வமானது, கண்டத்தன்மையதெனவும், அகண்டத் தன்மையதெனவும் தனித்தனி சொல் வோர்பலர். முகம், கை, கால் முதலிய அங்கங்களோடு கூடிய சகளமே (உருவமே) கண்டமென்று கூறு வோர் ஒருசாரார். பெயர், உருவம் யாதுமின்றிய நிட்களமே (அருவமே) அகண்டம் என்று கூறு வோர் மற்றொருசாரார். அவ்விருவர் கொள்கை யினையும் விடுத்து, அதற்குஒரு புறனடையாக, சகள (உருவ) நாட்டத்தில் அகண்டபாவனையுண்டு. அதாவது, தனது மூர்த்தியொன்றே மற்ற எல்லாப் பொருளாயும் நிறைந்துநிற்கும் வல்லமையின தென்று அறிவும் அநுபவமேயாம் என்பதை,
"சகளநாட்டக் காரருக்கும் தனிஅகண்டாகார ஞானம் உண்டு, அதுதான் வேறுதெய்வம் இலைஎன்றுஓர்தல்"
எனவும், நிட்கள (அருவ) நாட்டத்தில், கண்ட பாவனையும் உண்டு, அதுயாதெனில், பிரமமென்ற அகண்டபரத்துக்கு வேருகமாயை ஒன்று உண் டென்றும், விராட் புருடபாவனைநலமென்றும் கூறு கின்றபண்பு என்பதை.

..........."மாயை,விராட் ஆதியாகச்

சொல்லுகின்ற கண்டபா வனையோர் உண்டு" எனவும், கூறினர் என்க.

"என்கடவு ளேயிவனோர்க்(கு) எத்தேவும் ஆம்என்ன
நன்குணர்வோர்க் கெந்நாளும் நானடிமை யாவேனே"
என்னும் குருபரதத்துவக்கருத்துக்கும்,
"மாறுபடா தேக்காலத் தினும் உருவோ டருவாய்
மாயையென்றும் பிரமமென்றும் வயங்குமோர் பொருளே"

என்ற, திருவருள்நாட்ட நூற்கருத்துக்கும் முறையே, இவ்விருபகுதிகளும் போதியசான்றாகும் என்னலாம். கண்டத்தில் அகண்டமும், அகண்டத் திற்கண்டமும். விரவியுள்ள உண்மை, சாதாரண வாய்ப்பேச்சினர் அறியார். உண்மைத்தவமுடைய வரது அநுபவத்தில் விளங்கற்பாலது என்பதை "மேய்த்தவத்தோர் சத்தியத்தில்விளங்கும்" என்றறிவித் தனர்.

என்னை ?

திருவாதவூரடிகளுக்காக, மதுரை வைகை யாற்றங்கரையில் அரிமர்த்தனபாண்டியனது ஆணைக் கடங்கி, வந்தியென்பவளுக்கு ஆளாகிப் பிட்டுக்கு மண்சுமந்த பேரருட்பெருமானது திருமேனியில் அரசனடித்தபிரம்படி, சகலபுவனங்களிலும் உள்ள எல்லாஉயிர்களின் மீதும்பட்டது. அன்றியும், அருச் சுனனுக்குப் பாசுபதக்கணை கொடுக்க வேடவடிவங் கொண்டுவந்து போரியற்றிய பரமன் முடியில் அருச்சுனன் அடித்தவில்லின் அடி, அதுபோல் எங்கும்பட்டதையும் ஆராய்வார்க்கு யுத்தியள விலாவது விளங்கும். எனக் கூறினர்.

எனவே, பிரம்படி வில்லடி ஏற்கவந்த திருமேனிகள்போல, தாம் மனத்திற்பற்றித் தியானிக் கின்ற சகளமூர்த்தி, எங்கும் நிறைந்துள்ளபர மென்றும், தம்பொருட்டுக் கருணையால் உருவம் கொண்டு நிற்பதென்றும், அறிவது உபாசகர்கட்குரிய கடமையென்பதாம்.

"அருவமுடி வும்ப லோர் தொழும்
உருவநிலை யுங்கே டாதோளிர்
அருவுருவும் அன்று கூறிய—குருநாதா.

என்று இவ்வாசிரியர் வேறோரிடத்திற் கூறியதால் அநுபூதி உண்மை விளங்கும்.

காளிகறுப் பண்ணன்முதற் சிலவற் றுயும்
கடவுளே விளங்குகின்றன், கண்ணு டிக்கண்
ஞாளிமுகம் பார்க்கில்,அது சிங்கம் காட்ட
ஞாயமுண்டோ? அதுபோல நாடு வார்தம்
நீளியசென் மாந்தர்புண் ணியத்துக் கான
நெறிதோன்றும்; ஆயினும்முன் நிகழ்த்தும் ஆறும்
கோளிலவே, அவற்றுள்ஒவ்வோன் றினிற்பல் மூர்த்தம்
குலவும்,அந்த விவரமுற்றும் கூறேண் ணுதே.

போ - ரை. பத்திரகாளியும், மகாகாளனும், அதுபோல வேறு உள்ள சிறு தெய்வவடிவ பாவனையிலும், எங்கும் நிறைந்த பரம்பொருள் ஒன்றே கலந்துநிற்பதாகும். அதுஎவ்வாறெனில், ஒருகண்ணுடியில் நாயொன்று தன்முகத்தைப் பார்க்குமேயானுல், கண்ணுடி சிங்கத்தின்முகத்தைக் காட்டாததுபோல, மூர்த்திவடிவைத் தியானிப்பவனுடைய முன்னைய புண்ணிய நிலைக்கேற்ப, தன்மனத்துக்குப் பொருந்திய கடவுள்வடிவ பாவனை மனத்துக்கு ஏற்படும், இது உண்மையானுலும், இதற்குமுன்னைய கவிகளில் சொல்லப்பெற்ற அறுவகைச் சமயங்களும் குற்றமற்றவைகளாகும். அந்த ஆறுவிதச் சமயங்களிலும், ஒவ்வொன்றின் உட்பிரிவாகப் பலவித மூர்த்தி பேதங்கள் உள்ளன. அதன்பாகுபாடுகளைப் பொது நிச்சயம் கூறவந்த இந்நூலிற் சொல்லற்பாலதன்று. அல்லாமலும் அளவுபடாமல் விரியும் ஆதலாலும் என்க. எ-று.

வி-ரை. சகள்(உருவ) மூர்த்திகள் தோற்றுதற்குரிய முதற் பொருளினது தன்மையும், அதற்கு ஓர்

உவமையும், ஆன்மாக்கள் சமயப்பற்றை அடைதற்குரிய காரணமும், பழையவைதிக சமயமான ஆறின் தகுதியும் விளக்க இக்கவி எழுந்ததென்க.

இழிந்த சமயங்களும், உயர்ந்த சமயங்களும், பல உள்ளனஆயினும், அவற்றிற்குரிய குறிக்கோளான மூர்த்தி வடிவங்களும் பலவாகும். மேலான சத்துவ (சாந்த) குணமானமூர்த்திகளாய் விளங்குவதன்றி, தமோகுண (கோர) மான காளி, துர்க்கை போன்ற சாதாரணமூர்த்திகளாகவும் பாவிப்பவர்கட்கு முன்னிலைப்படுவது பொதுவான பரம்பொருள் ஒன்றேயாம் என்பதை "சிலவற்றுயும் கடவுளே விளங்குகின்றுன்" எனவும், அதை விளக்குதற்கு உவமையாக, கண்ணுடியிற்காணும் எதிர்க்காட்சியை எடுத்துக்காட்டி "ஞாளிமுகம்......சிங்கம்காட்ட ஞாயமுண்டோ" எனவும்கூறினர்.

அங்ஙனமாயின், உயர்ந்த சமயநெறிகொண்டு தெய்வத்தை வழிபடுவதை விடுத்து, இழிகுண மார்க்கத்தில் பலர்ஈடுபடுவது ஏன்? என்ற ஐயம்நீக்க, பூருவபுண்ணியத்தின் அளவான வகையில் ஆன்மாக்கட்குச் சமயப்பற்று அமையும் என்பதைத், திருவருள் காட்டும் என்றகருத்தை "சென்மாந்தர புண்ணியத்துக்கானநெறி தோற்றும்" எனவும், அவ்வாறு உயிரின் புண்ணிய அளவுக்கேற்றபடி பல நெறிகள் தோற்றுவனவாயினும், அவற்றை அங்கங்களாகக் கொண்டு அருவமான பரம்பொருளின் ஆறு அங்கங்களாக வேதத்திற்கூறப்பட்ட ஆறுமதங்களும் குற்றமற்றவைகளே என்றகருத்தை "நிகழ்த்தும் ஆறும் கோள் இல"எனவும், சமயங்கள் ஒவ்வொன்றினும் மூர்த்தி பேதங்கள் காணப்பெறுவதால், அவ்விவரங்கள், அவற்றின்உயர்வு தாழ்வு, இவற்றைச் சொல்லுதல் வேண்டும் என்ற மாணவனுக்கு, ஒரு சமயத்தைப்

பற்றி நின்று அநுபூதியில் அறிதல்வேண்டுமன்றி, கலையுணர்வுகொண்டு இந்நூலில் கூறுதல் முறை யன்று என்பதை "ஒவ்வொன்றினில்...விவரமுற்றும் கூறேனென்றது" எனவும் கூறி முடித்தார்.

அதுபோல என்றசொல், தாப்பிசைப்பொருள். என்னை? "ஞாயமுண்டோ, அதுபோல" என்றும், "அதுபோல நாடுவார்தம்" என்றும் கொள்ள இருப்ப தென்க. ஆறும் என்றதிலுள்ள உம்மை, முற்றுப் பொருட்டு. (முடித்துக்கூறுதல் என்பதாம்) சில வற்றையும், என்ற உம்மை இழிவுப் பொருளது. 30

முக்கண்ணும் மான்மழுவும் பொருந்தும் ஈசன்,
முடியில்மயிற் பீலியணி முகுந்தன், ஐந்து
கைக்கணநா யகன், வேலும் தண்டும் தாங்கும்
கரமுருகன், முலைமுதிராக் கவுரி, கீழத்
திக்கதனில் எழுகதிராம், ஆறு மூர்த்தம்
சிறந்தனஎன் றறிவறிந்தோர் செப்பக் கேட்டேன்,
எக்கடவுட் (கு) எவர்உரிமை பூண்டுற் றலும்
எனக்கதுசம் மதம்;முடிவில் ஏகம் தானே.

பொ-ரை. மூன்றுகண், மான்மழுவுடைய சிவ வடிவும், தன்தலையில் மயிலிறகணிந்த கண்ணனும், ஐந்துகைகளையுடைய கணபதியும், வேலாயுதமும் தண்டும் கொண்டுள்ள தண்டபாணிவடிவும், பாலப் பருவ உமையும், கீழ்த்திசையில் உதிக்கும் சூரியனும், ஆகிய ஆறுவகைமூர்த்திகள் சிறந்தன என்று உண்மை யறிந்த பெரியோர் கூறத்தெரிந்துள்ளேன். அவ்வா றிருப்பினும், என்கருத்துக்கு யார் எந்தத் தொண் டர்கள், எந்தமூர்த்திக்கு அன்புபூண்டு தியானித் தாலும் உடன்பாடேயாகும். ஏனெனில், அவ்வு

பாசனை முதிர்ந்து பயன்தரும்போது ஒரே பொருள் தான் யாவும் என்ற உறுதியிற் கொண்டுவிடும் ஆதலின் என்க. எ-று. ஏ-அசை.

வி-ரை. வேதஉடன்பாடான ஆறுவிதமூர்த்திகளின் உட்பிரிவுகளுள், சிறந்த ஒவ்வொன்றை எடுத்துக்கூறி, அவற்றிற்கு அப்புறப்பட்ட மேல்நிலை நிச்சயத்தையும் இக்கவிவிளக்கி நின்றதென்க.

உபாசனையின் தொடக்கநாளில், ஆகம, புராண, சிற்பமுதலிய நூல்களின்வழி ஆராய்ந்து வேதவுடன்பாடான ஆறுவிதச்சமயங்களின் விவரமுணர்ந்து, தத்தம்முற்பிறவியின் புண்ணிய அளவுக்கேற்ப அவற்றுள் ஒவ்வொன்றைப்பற்றி, வழிபடத் தொடங்குவதில், பலவிதமிருப்பக்கண்டு, இவற்றுள்ள எதனைப் பற்றிவழிபடுவது? என்று ஐயுறும் நிலையில் உள்ளோருக்குத் தெளிவு விளக்கும் பொருட்டு விவரம் கூறுவதானார்.

சிவமூர்த்தத்தில், நடராசர், தட்சணாமூர்த்தி, சோமாஸ்கந்தம் போல இருபத்தைந்து இருப்பினும் அவற்றுள் தனிவடிவாய் மான்மழு வணிந்த சிவவடிவும், திருமால் வடிவில் ,சங்குசக்கரமாதிய அணிந்தது. நாகசயனத்துள்ளது, நரசிம்மம், போன்ற பல இருப்பினும், *மயிலிறகைத் தலையிற்சூடிய தனிக் கண்ணன் வடிவும், விநாயக வடிவில், வல்லவை

*ஐந்துபூத இலக்கணங்களும், அவற்றிற்கு அப்புறப்பட்ட பரவெளித்தன்மையும், தன்னிடத்துள்ள தென்னும் தன்மையைத்தத்துவஞானிகள் உணர, சூக்குமத்தில் உணர்த்துவது போல், தூலவடிவிலும் அவ்விலக்கணத்தைத் துலக்குவதான மயிலின் இறகைத் தன்முடியிற் கண்ணன் சூடியதெனஅறிக.

கணேசர், மயூரகணேசர் எட்டுத்தோள். ஐந்து முகம் உடையது போன்ற பல இருப்பினும், † நாற்கரங்களும் துதிக்கையுமாகவுள்ள தனிவிநாயக வடிவும், முருகப்பெருமான் திருவுருவில், நாற்புய முள்ளபாலமுருகன், ஆறுமுகக்கடவுள், கார்த்தி கேயர். வள்ளிதெய்வயானையுடனுள்ள முருகன், மயில்மீதுள்ள முருகன் முதலிய பலஇருப்பினும், குமர குருபரன் என்றபெயருடன் பத்திநெறியின் பிடிப்பை விளக்கும் தண்டமும், வைராகத் தன்மையை விளக்கும் கோவணஉடையும். கொண்டு திருநீற ணிந்து சகள நிட்களத்தன்மையைக் காட்டுகின்ற ஞானசத்திவேலணிந்து இரண்டுதோளுடைய தனி வடிவத் தண்டபாணியும், சத்திவடிவில், புவனே-திரி புரை, காளி, துர்க்கைபோன்ற பல இருப்பினும், மூன்று அல்லது ஐந்துவயதளவுள்ள பளிங்குநிறத் திருமேனியும். நீலஉற்பலப் பூவணிந்து விளங்கும் பாலை வடிவமும், சூரியமூர்த்திகளில் வானவெளியில், மேட முதலியபன்னிரு வீதிகளில் உலவுகின்ற பன்னிருவகையாய், ஏழுபச்சைக்குதிரை, ஒற்றை ஆழித்தேர், அருணன் என்ற அரையுடற்பாகன் முதலியகொண்டுள்ள வடிவம் பல இருப்பினும். அக இருள் போக்கும் அருளொளிபோல், புறஇருள் போக்கி உலகை உய்விக்கும் சூரியவடிவும், மனதிற் பற்றி உபாசிப்பவர்கட்குச் சிறப்புடையன என்று பெரியோர்வாயிலாக ஆறுமூர்த்தம்சிறந்தன……சேப்பக் கேட்டேன்" எனக் கூறினர்.

பொதுவகையாய் மேலோர் கூறக்கேட்பது தமக் கும் உடன் பாடென்னும் விவரத்தை ஈண்டு விளக்

---

†கற்பகத்தருவைப்போல, ஐம்புலனுகர்ச்சிக்குரிய இன்பத் தையுதவுகின்ற அவைநாளும்படி, ஆனந்தபோகமும். அற்புத முத்தியும் தருதற்குரியவை விநாயகரது ஐந்துதிருக்கரங்களாம்.

கியது முறையாயினும், இவ்வாசிரியரது சிறப்புக் கருத்துயாது என ஐயமுறுவாருக்கு, யார் யார் எவ்வெவ்விதவடிவ பாவனை பற்றி நின்று உபாசித்தாலும், அவ்வழிபாடு இடையூறின்றி முதிருமானால், பேதமற்ற அதீதமான (முடிவான) நிச்சயமே அமையுமாதலின் எனக்கு அவை உடன்பாடேயாம் என்பதை விளக்க "எனக்கு அதுசம்மதம், முடிவில் ஏகம்தான்" எனமுடித்தனர்.

அங்ஙனம் முடித்தமையால், மற்றவடிவங்கள் உயர்ந்தன அன்று என்றோ, ஆகாதன என்றோ, பொருளல்ல. உபாசகனது அநுபவத்தில் மூச்சுக் காற்றானது, இடைகலை, பிங்கலை என்னும் நாடிகளாய்த் தனித்தனி இயங்குவது தூலநிலையும், இரண்டும் ஒன்றுபட்டு மேல்நிலைச்சுழி முனையாய் அமைவதே மேருத்தம்பமும், தியானபாவனைப்படி மனவெளியில் முற்பட்டுத் தோன்றும் தெய்வவடிவமானது, திருவருட்கருணைச்சகளம் ஆதலால் அவ்வாறு தோன்றும்மூர்த்தி, ஏகவடிவாய் விளங்குவதே அநுபூதிமான்கள் கொள்கைக்கு ஒத்தது, ஆதலால், மூர்த்திகள் ஒவ்வொன்றுக்கும் உரியதேவிமார், வாகனங்கள், பரிசனங்கள், முதலியன அமையத்தியானிப்பது புராணமுறைப்படி விரிந்தவிவகாரமாதலாலும், பாவனைக்கு எளிதில் அமைவது அரிதாதலாலும், உபாசகர், எளிதிற் பற்றுதற்பொருட்டும், இவ்வாறு சுருங்கியமுறையைக் கூறினரென்க.

முடிவில் ஏகம் என்றதற்கு, ஒரேபொருள் என்ற நிச்சயம் எனவும்; ஒரே இடத்தையடையும் எனவும் கொள்க. "ஒன்றதே பேரூர், வழியதற்கு ஆறுள" என்ற திருமூலர்கருத்துக்கு ஒப்பாகும். மேற்கொண்டும் ஒரு சுருக்கமுறை அடுத்துக் கூறுவதுகாண்க.

அறிவரிய தெய்வத்துக்(கு) உருவம் சொல்லின்
ஆண்பெண் எனும் இரண்டுவிதம் அன்றி வேறு
குறியிலையாற், குகன்;வாலை; என்ன நூலோர்
கூறும்இவற் றொன்றைநம்பிக் கும்பிட்(டு) உய்வீர்!
பொறிமயிலாம் குடிலைமிசை ஞான சத்தி
புனைந்த செங்கைக் குமரன்எனப் போற்று கின்றேன்
வெறிகமழ்மென் மலர்ப்பூசை பலநாட் செய்து
வியன்தமிழால் மிகத்துதித்(து)இவ் விரகுற் றேனே.

பொ-ரை. சீவர்கள் தற்சுதந்தரமாய், கருவி கரணம் கொண்டு அறிதற்கமையாத அருவமான பரம்பொருளுக்கு, பரம்பரையன்பர்கள் வழிபடுதற்கு உருவம் வகுத்து ஓதுமிடத்து, ஆண் உருவம், பெண் உருவம் என்ற இருவகை தவிர மூன்றாவதாக ஒன்றில்லை. ஆண்வடிவமாகச் சிந்திக்க விரும்புவோர், முன்கூறிய முருகன் வடிவமும், பெண்வடிவமாய்த் தியானிக்க விரும்புவோர், முற்கூறிய பாலைவடிவமும், என்ற முறையில், ஆன்றோர் கூறியபடி இவ்விரண்டில் ஒரு வடிவை உறுதியுடன் கைக்கொண்டு, நம்பி வழிபாடுசெய்து உய்வீர்களாக! எனது நிச்சயம் எது என்றால், புள்ளிச் சிறப்புடைய மயிலாகிய பிரணவ வட்டத்துள் திருவருள்ஞான வேலாயுதமணிந்த திருக் கரங்களையுடைய பரமசற்குருநாதனைக் கருதித் தியானித்து வழிபட்டு வருகின்றேன். மணம்நிறைந்த மென்மையான பூக்களால் இயற்றுகின்ற சிறப்பு வழிபாடுகள் பலவற்றைப் பலகாலம்செய்தும், இனிய தமிழ் மொழியால் மிகத் துதிசெய்தும், அவற்றின் பயனாக இத்தகைய அநுபவ நிச்சய அறிவைப் பெற்றேன் எ-று. ஏ-அசை.

**விரை.** அருவமான பரம்பொருளை, உருவமாக் குதற்குரிய பாகுபாடும், அவற்றுக்கு ஒருசிறப்பு

விதியும், தனதுநிச்சய அநுபவமும், அதற்குரியவழி யும்விளக்கி இக்கவியமைந்தது.

சுத்தப்பிரம்மமான பரம்பொருளின் அருவ இலக்கணம் கருப்பஞ்சாறு போல்வதும், உருவ இலக் கணம் அதனூற்றிரண்ட கற்கண்டு ஆகும். அவற்றுள் சொரூபமென்ற அருவமானது, தூலமாகிய கருவி கர ணங்களையுடைய உயிர்வகைகள் பற்றிஅடைவதற்கு அரிது ஆதலின், அதனை சகளமாக உருவகித்துப் பரம்பரையன்பர்கள் உணர்ந்து உய்தற்பொருட்டுக் குருமார்களால் பழமையான வேதஆகமங்களில் உருவம்வகுக்கப்படுமிடத்தில், ஆண்வடிவம், பெண் வடிவம், என்னுமிரண்டன்றி வேறு வகுத்திலர் என் பதை இரண்டுவிதம் அன்றிவேறு குறியிலை எனவும், உபாசனை செய்பவரது பக்குவம் பொருந்தியவாறு ஆண்வடிவை விரும்புவோர் குகன்வடிவமும், பெண் வடிவை விரும்புவோர் பாலைவடிவமும் பற்றி உய்வது சிறப்பு என்பதை, சுருங்கச்சொல்லல் என்னும் அழகு கொண்டு,

"குகன்,வாலை என்னநூலோர்,கூறுமிவற் றேன்றை
நம்பிக் கும்பிட்டு உய்வீர்"

எனவும் கூறினர்.

இவ்வளவு தெளிவாக ஞாயங்களை எடுத்துக் கூறும் இவ்வாசிரியர் கைக்கொண்டுள்ளது எப்பகுதி என்று ஐயுறுவோர்க்கு, தெளிவுபுகட்ட விரும்பி, எல்லாவற்றுக்கும் காரணமாய், பரந்துவிரிந்தும் உருவ முற்றும் விளங்குகின்ற பிரணவவட்டத்துள், ஞான மயமான சத்தியை வேல்வடிவாக அமையக்கொண் டுள்ள திருவருள்வடிவக் குருபரன்வடிவாகப் பரம் பொருளைச் சிந்திக்கின்றேன் என்பதையும், இத்த

கைய மேலான சமரச நிச்சயமான அறிவுத்தெளிவு எதனுல் தனக்கு அமைந்தது என்ற வினுவுக்கு விடையாக, ஒருசமயப்பற்றுடன் பலகாலம் மணமிக்க பூ வகையாற் பூசித்தும், அரிய தமிழ்க்கவியால் பலவாகப் பாடித் துதித்தும், அடையப் பெற்றேன் என்பதையும், விளக்க

"வெறிகமழ்மேன் மலர்ப்பூசை பலநாள் செய்து
வியன்தமிழால் மிகத்துதித்துஇவ் விரகுஉற்றேன்"

என்றுர்.

எனவே, உய்த்துணருமுறையில், மற்றையரை நோக்கிநீங்களும் உபாசனையின்போது சலிப்பும்,மகிழ்ச்சியும் அடையாமல், உங்கட்கேற்ற உருவடிவநாட்டத்தில், வேறுபாடு, சந்தேகம் கொள்ளாமல், கருத்துக் குமாறுபட்டோரது உறவைவிட்டு, அன்பினர் தொடர்புகொண்டு, வழிபட்டுத் துதிசெய்துவந்தால் திருவருட் கருணையால், சகளநிட்கள சமரசநிச்சயத்தையடைந்து, சற்குருவேபரம் பொருள் என்று அறியும் கௌமார சித்தர்களாக வாழ்வீர்கள் என்று கூறினுராயிற்று.

ஆகவே, பூசித்து, தோத்திரித்துக் கும்பிடும் பருவம், சாதக (பயிற்சிக் கால)மாகிய கௌமாரத் தன்மையும், அதுமுதிர்ந்த உய்வாகிய சாத்தியமே (சொருபசித்தியே) குமாரத்தன்மையுமாக அமையுமென்பது குறிப்பு.

32

ஆயிரம்பொன் பெறும்ஆனை தன்னைத் தந்திட் (டு)
அரைப்பணமே பெறுந்தோறட்டி யதைநல் கார்போல்
மாயிரும்ஞா லத்தில்மிகப் படுத்தும் தன்மை
வழிபடு(ம்)மூர்த் திகட்குரிய வழக்கம் கண்டீர்!

காயிரும்(பு)உண் டிடும்நீர்போற் போமா றெண்ணிக்
கலங்காமற் றியானிக்கை கடனும்: சொன்னேன்
போயினது வந்ததென்பார் தமக்கும் நீங்காப்
பொருளென்பார் தமக்கும்இதோர் பொதுநூல் முற்றே.

பொ-ரை. ஆயிரம் பொன்விலை பெறுமென்று மதிக்கக்கூடிய அழகிய ஆண்யானையொன்றைப் பரிசாகக்கொடுத்த ஒருஅரசன், அதையடக்கி ஆளுதற்குரிய தொறட்டி என்ற அங்குசத்தை உதவாதது போல, மாண்புடைய விரிவான இவ்வுலகில், பல உயர்ந்த ஞான அநுபவங்களை உபாசகனுக்கு உதவியருள்கின்ற தெய்வமானது, அதிகப்பட்ட துன்ப நிகழ்ச்சிகளைச் சோதனையாகக் கொடுத்துப்பார்ப்பது உபாசனைக்குரிய மூர்த்திகளின் இயல்பாகும். அவ்வாறு அளவற்ற சோதனை நேர்ந்தாலும், அதில் மனம் கலங்கி மாறுபடாமல் நிலைத்து, நெருப்பிற் காய்ச்சப்பட்ட இரும்புத் தகட்டினால் உறிஞ்சப் படுகிற தண்ணீர்த்துளிபோல, சுத்தப்பிரம்மத்துடன் உயிர் ஒன்றுபட்டுக்கலக்கின்ற முத்திப் பேற்றையடைவது முக்கியப்பயனாகக்கருதி, தியானசிந்தனையாகிய பத்தியோகத்தைச் செய்துவருகின்றது உங்கட்கு இன்றியமையாத கடமையாகும்.

போவதும் வருவதுமாகத் தெய்வம் உள்ளது என்று உறுதிகொண்டுபேசும் உருவவாதிகட்கும், சிறிதும் அசைவதற்ற அகண்டமாகத் தெய்வம் உள்ளதென்று கொண்டுகூறும் அருவவாதிகட்கும், இதுவரை கூறிவந்த இந்நூலானது ஒப்பற்றதும், பொதுவானதும்ஆகிய வேதநூலின்முடிந்த முடிவானகருத்தாகும். எ-று. கண்டீர்-முன்னிலைஅசை.

வி-ரை. திருவருள்வடிவத் தெய்வத்தின் நீதித் தன்மையான பத்திசோதனையின்விவரமும், அதற்

கேற்ற உவமையுங்கூறி, அன்பர்கள் கைக்கொள்ள வேண்டிய நியதி, ஒழுக்கமும் நூலின் தகுதியும் விளக்கி, அதிகாரியிலக்கணமும் கூறி இக்கவி முடிந்தது.

எல்லாம் வல்ல முழுமுதற்பொருளாகிய தெய்வம், கருணையும் நீதியுங்கலந்த திருவுள்ளமுடையது ஆதலால், குழந்தையின் பிணிதீரும் பொருட்டு, தாயானவள் மருந்தினை ஊட்டல்,பத்தியம் வைத்தல், சூடுபோடல் முதலியவகையால் வருத்துவது கருணையே ஆவதுபோல, உபாசகனது ஆன்மாவின் மூலமலமான ஆணவாதிநோய் தீர்தற்பொருட்டுப் பலவிதஇன்னல்களைச் சோதனையாக வெளிமுகத்திற் செய்தும், உள்ளத்தில் தனதுநிறைந்த கருணையைக் காட்டியும்,, நிற்கும்தகுதியினது என்பதைவிளக்க உவமானமுகத்தால் "ஆனைகொடுத்தோன் அங்குசம் கோடாதது போல்" என்னும் பழமொழியை விளக்கி, "மிகப்படுத்தும் தன்மை வழிபடும் மூர்த்திகட்கு உரியவழக்கம்" என்றும், அவ்விதம் நேரும் சோதனை பற்றி மனம்கலங்கினால் சோர்வுநேர்ந்து பயனை இழக்க நேரும் என்பதை, "கலங்காமல்" என்றும், தியான யோகப் பயிற்சிக்காலத்தில் எவ்வளவு துன்பம் நேரினும், அதன் முதிர்வில்வரும் பேரின்பத்தை நுகரும் ஆனந்தத்துக்கு, அவை ஒருசிறிதும் இணை யாகாது. அதன்பின் அந்த ஆனந்தத்துக்கும் மேற் பட்டதான ஐக்கமுத்தியைப் பெறவிரும்பி, உபாசனை யியற்றல் வேண்டும் என்பதைவலியுறுத்தும் பொருட்டு,

" காய் இரும்பு உண்டிடும் நீர் போல்போம்
ஆறு எண்ணி......தியானிக்கைகூடன்
ஆம்சொன்னேன் "

என்றும் கூறினர்.

மாயையின் செயலால் நேரும் தேகபோக இன்பத்தை விரும்பிய ஒருவன், தனது ஆசைக்கு உரியவளால், பொருட்செலவு, உலகநிந்தை, ஏவற் பணி, அவமானம், தேகப்பிணி, முதலிய எத்தனை இடுக்கண்வரினும், அவற்றால்கலங்காது முயன்று பெறுதல் உலகியல் ஆனபோது, ஞானமயமான பேரின்பமும், அதனில்மேம்பட்ட பரமுத்தியும், திருவருட்சத்தியால் பெறவிரும்பி உபாசிக்கும் அன்பர்கள், தெய்வசோதனையில் கலங்காமல் வழிபடுதல் கடமை என்பதை விளக்க அவ்வாறு கூறினரென்க.

காய்ந்த இரும்பில் தெளிக்கப்பட்ட நீர்த்துளியானது, எவ்வாறு அதனால் உண்ணப்பட்டு, தான் வேறின்றிப்போகுமோ அதுபோல, சிற்றறிவுடைய உயிர், பேராற்றலுடைய திருவருட்சோதியில் ஒன்றுபடுவதே முத்தி என்பதைக் காய்ந்த இரும்பில் ஒன்றுபடும் நீர்த்துளிக்கு ஒப்பிட்டனர். தெய்வவழிபாட்டு நெறியிலமைந்த தொண்டர்கள், பலவகையினரேனும், பொதுவில் உருவவாதிகள். அருவவாதிகள் என்ற இருவகையில் ஒடுங்குவர், ஆதலின், அந்த இருபகுதியினருக்கும் ஒப்பமுடிந்த சமரசமாகிய வேதமுடிவே இந்நூற்கருத்து என்பதை,

> "போயினது வந்ததுஎன்பார்தமக்கும் நீங்காப்
> பொருளென்பார் தமக்கும் இதுஓர் பொதுநூல் முற்று"

என்று கூறிமுடித்தனர்.

"நூல்முற்றே" என்பது இரட்டுறமொழிதலாகி, வேதநூலின் நிச்சயமுடிவு என்றும், அதைவிளக்கிக் கூறவந்த இந்தத் "தியானுநுபூதிநூல்" முடிந்ததென்றும் பொருள் காட்டிநின்றதறிக. 133

## நூற்பயன்

வெண்பா

செப்பத் துயர்போம்; தியானு பூதியின்பா
முப்பத்து மூன்றும் முழுதுணர்ந்தோர்—கோப்பத்துக்
குஞ்சரத்தில் வாடார்; குறைதீர்ந்த நெஞ்சகமாம்
பஞ்சரத்தில் வாழும் பரம்.

போ—ரை. படித்தஅளவிலேயே படித்தவரது இன்னலை நீக்கும் தகுதிவாய்ந்த தியானுநுபூதியென்னும் இவ்வரியநூலின் முப்பத்து மூன்று பாடல்களையும் முற்றும் கற்றறிந்தவர்கள், படுகுழியில் வீழ்த்தப்பட்ட மதயானையைப்போல் வருந்தமாட்டார்கள்; மனத்தின் பல எண்ணங்களால் ஏக்கமடையாத அவர்கள் மனமென்ற அழகியகூடத்தில் பரம்பொருள் பிரிவின்றி நிறைந்துநிலைத்துநிற்கும் எ-று.

வி-ரை. தியானுநுபூதி என்னும் காரணச் சிறப்புப்பெயர் வாய்ந்த இந்நூலின் கண்உள்ள முப்பத்து மூன்று கவிகளையும், மூலபாடத்தளவிற் படிப்பவர்கட்கும் உள்ளதுன்பம் நீங்கும் என்பதை, "செப்பத் துயர் போம்" எனவும், சொற்செறிவு, பொருள் அருமை அறிவோர், அவ்வித ஒழுக்கம் முதலிய கொண்டுநடப்போர், மாயைசம்பந்தமான உலகபோக மயக்கத்திற்சிக்கி, நீங்கும் வழியறியாமல் ஆணவ இருளில் அழுந்திவருந்தார் என்பதை விளக்க " முழுதுணர்ந்தோர் கோப்பத்துக் குஞ்சரத்தில் வாடார் " எனவும்கூறினார். எனவே, மாயையற்ற பரமானந்த

---

பஞ்சரம்—கூண்டு. கிளிகூண்டில் அமைந்திருத்தல்போல, மனமாகிய கூட்டில் பரமாகியகிளி, அமைந்துவிளங்கும் என்பதுகருத்து,

யோகாநுபவச் செல்வத்தில் அமைந்து மகிழ்ந்திருப்பார் என்பதாயிற்று.

அவ்விதம் அமைவோருக்கு, முடிவில் முன்னிலைச் சுட்டற்ற அசி பதநிலையாகிய நிட்களசமாதிநிலை நேர்ந்து, தான் அதுவாயமையும்படி மனமாகியகூட்டில் பரம்பொருள் முற்றும் நிறைந்து விளங்கும், அந்நிலையில் விவகாரங்களில் ஈடுபடும் நெஞ்சமும், அதன் தொழிலாகிய எண்ணங்களும் குறைகளும் அற்றொழியும் என்பதை "குறைதீர்ந்த நெஞ்சகமாம் பஞ்சரத்தில் வாழும்பரம்" எனமுடித்தனர்.

ஆன்மாக்கள் அடையும் சுகங்களானவை, துன்ப நிவிர்த்தி இன்பப்பிராப்தி எனஇருவகைப்படும்ஆதலின், தூலமான கருமகாண்டபக்குவிகள் மருள் என்னும் நிலையிலிருந்து பொதுவாக இந்நூலைப் படித்தால், விவகாரமாக நேருகின்ற துன்பங்களை நீக்குவதாகிய பொதுப்பயனையும், சூக்குமமான பத்தி காண்டப்பக்குவிகள் தெருள்என்னும் நிலையிலமைந்து, சொற்பொருள், கருத்துவிளக்கமறிந்து பொதுச் சிறப்பாகத் தியானயோகங்களில் முயன்றபோது, மனத்தின்கண் உண்டாகின்ற மாயை, கன்மம் தவிர்ந்த ஆனந்த அநுபவமாகிய பொதுச்சிறப்புப் பயனையும், தந்து, காரணமாகிய ஞானகாண்டப் பக்குவிகள், காண்பான், காட்சி, காணப்படு பொருள், என்ற மூன்றும்அகன்ற அருளான நிலையிலவிர்ந்து, பரம்பொருளின் வியாபகத்தில் உள்ளம் ஒன்றுபட்டு நிற்க, பரமானது அவரதுஉள்ளத்தைச் சிறப்பாக முற்றும் கவர்ந்து தன்மயமாய் விளங்குகின்ற பேதமற்றதகுதியையும். இந்நூல் தரும் என்பதை இக்கவி விளக்கியவாறாயிற்று.

---

வெண்பா

தியானுந பூதியேனும் தேய்வஅருள் வேதம்
தயாமிகையாற் சோற்றேமக்குத் தந்த-சுயாநுபவம்
கோண்டதண்ட பாணிக் குருநாதன் றன்னுரிமைத்
தோண்டர்திருத் தாள்எம் துணை.

உரையாசிரியர். தி. மு. செ. சுவாமிகள்இயற்றியது.

தியானுநுபூதிநூல். உரை. நிறைவுற்றது.

தெய்வமேதுணை.



இந் நூல் கிடைக்கும் இடங்கள் :

1. தலைவர். கௌமார மடாலயம்,
சின்னவேடம்பட்டி, P. O.
கோயம்புத்தூர் - 6.

2. தலைவர். கௌமார மடாலயம்,
திருவாமாத்தூர்,
விழுப்புரம், P. O,

Paari Achakam, 127, Broadway, Madras-1.